

திவயாபாங்கம் திசஸி கருணேயேஷு ஸத்தேசிகாதமா
க்ஷிபரம பராபதா: வருஷகிரிபதிம் க்ஷத்ரபந்த்வாதயஸ் தே
விசவாசாாயா: விதி சிவ முகா: ஸவாதிகாரரோபருத்தா:
மந்யே மாதா ஜட இவ ஸுதே வத்ஸலா மாதருசே த்வம்

தயாதேவியே' நீ ஸதா சார்யருபத்திலிருந்து திவ்யமான கடாக்ஷத்தைப் பண்ணுகிறுய். உன்னுடைய கடாக்ஷம் யார் மீது விழுகின்றதோ, அவர்கள் எலலாம திருவேங்கடமுடையானே விரைவில் அடைநது விட்டனர். அவ்வாறு அடைந்தவர்கள் க்ஷத்ரபநது போன்ற கொடிய பாபிகள்• உனது கடாக்ஷத்தைப் பெருமல ஐஃதாசார்யர்கள் என்று பெயரை வைததுக கொணடிருககும் பிரமன் சிவன் ஆகியோா அவர்களுக்கு ஏற்பட்ட கடமைகளேச செய்யவேண்டியிருப்பதால் கடுக அடையமுடியவில்லே. அசடும் ஸாமர்த்தியமும இல்லாத குழநதையினிடத்தில் தாய்கககு நேசம் அதிகம், ஆதலால் எங்களிடம்தான் உனக்கு அதிக வாத்ஸலயம - பாசம் உண்டு எனறு நான் எண்ணுகிறேன்,

தயாசதகம் - 50



# ஸப்தகிரி


## நவம்பர் - 1989

தனிபபிரதி ரூ. 1 | மலர் 20

வருடச் சந்தா ரூ. 12 | இதழ் 6


## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முனனட்டை | ஸ்ரீ பத்மாவதி அமமையார் சித்திரம் —கே ஜெகதீஷ் |
| முதல் உளஅட்டை | தஙக விமானம |
| 2-வது உளஅட்டை | பஞசமி தீர்த்தம - (சக்கர ஸநானம) |
| பினனட்டை | திருககோயில் உடதோற்றம் |

ஸ்ரீ பத்மாவதி அம்மையார் திருககோயில்-திருச்சானூா .


*சிறபபாசிரியர்*

திரு. சிஎச். வெங்கடபதிராஜு IAS.,
செயலாட்சித தலைவா,
தி.தி.தேவஸதானம, திருபபதி.

*ஆசிரியர்*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

*அச்சிடுபவர்*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளா,
தி.தி தேவஸதான அசசகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன் . . . .

இந்திய மண்ணைப் பொருத்தவரை சமுதாயமும், சமயமும் வேறுபட்டதல்ல; ஒன்றுக்கொன்று முரண்பாடு கொண்டவையுமல்ல. சமுதாயத்தின் வளர்ச்சி சமயத்தின் மறுமலர்ச்சியின்மீதே கணிக்கப்பட்டு வந்துள்ளது. ஆம, இறை நம்பிக்கையினை ஆணி வேராகக் கொண்டு இந்திய சமுதாயம் எனும் ஆலமரம், பல கடவுளர் வழிபாடுகள் எனும் விழுதுகளையே பல கிளைகளாகக் கொண்டு விளங்கி வருகிறது. ஆலமரத்திற்கு அழகே-பலமே அதன் விழுதுகள்தாம். இவ்வகையில் இந்து சமயத்தின் பெருமை பேசுவன பலவேறு தத்துவக்கோட்பாடுகளைக் கொண்ட பல கடவுளர் வழிபாடு கள்தாம். வழிபற்றும் முறைகள் மாறுபட்டாலும், வழிபடும் கடவுளர்கள் வேறுபட்டாலும் எல்லாவற்றிற்கும் மேலாக ஏதோ ஒரு சக்தி இவ்வுலக உயிர்களை, இயற்கையை சீராக இயக்கி வருகின்றது. அதனைத்தான் இந்து சமயம் பரம்பொருள் என்று அழைக்கின்றது. அப்பரமபொருளைத்தான் மாதவனாகவும், மகாதேவனாகவும் முறையே வைணவமும், சைவமும் கொண்டேற்றிப் பெருமைப்பட்டுக் கொள்கின்றன. இதில் தவறேதும இல்லை. ஒரு தாய்க்கு அடுத்த வீட்டுக் குழந்தையை விட தான் பெற்றக் குழந்தையினமீதுதான் அதிக அன்பும், பாசமும் வைத்திருப்பாள். இது இயற்கை. ஆனால் அடுத்த வீட்டுக் குழந்தைககு ஆபத்து நேரிடின், அங்கு பேதம் பார்க்காது அத்தாய் ஓடி வந்து காபபாற்றுவாள். இது தாய்மை. தன்னிச்சையாக ஒரு தாய்க்கு ஏற்படும் ஓர் உணாவு. இந்த உணர்வுதான் அத்தாய்க்குப் பெருமை சேர்க்கிறது. இத் தகு ஒரு பொது உணர்ச்சியினைத்தான இன்றைய பாரதம சற்றே இழந்துவிட்டதோ எண்ணத் தோன்றுகிறது. தாய்மை எனும் அநத இந்து சமயப பொது உணர்ச்சியினை நாம மறக்கும் அளவு, நாம் நம் உரிமையை, சுதந்திரத்தை நம் கண் முன்னே நம் சந்ததியினர் இழப்பதைப் பார்ககும் ஓர் அவல, அபாய நிலையில் தள்ளப்படுவோம்.

வேதங்களோ, இதிஹாஸஙகளோ, சமய இலக்கியங்களோ சமயக் காழ்ப்புணர்ச்சியினைத் தோற்றுவிக்கவில்லை; ஆனால பின்னால வந்தவாகள் பினனிய குழப்பஙகளால்தான் இநது சமயப் பிரிவுகள தங்களுக்குள் மாறுபட்டு விளங்கின. இனத்தாலும், இடத்தாலும், மொழியாலும இயற்கையாகவே பாரதம கூறுகளாக்கப்பட்டாலும், அது சிதறிடவில்லை; சீரழிந்துவிடவில்லை. மாறாக ஒறறைக்கால் மண்டபமாக அமையாது ஆயிரங்கால் மண்டபமாக விளங்குகின்றது. வேற் றுமையில் ஒற்றுமை கண்டு உயர்நதிட்ட இந்த மண்ணில் இப்போது நடைபெறும் சமயப் பூசலகளுக்கும், ஜாதி கலவரங் களுககும காரணம் வெளியார் எவரும் இல்லை. இம்மண்ணின மைந்தர்களே தங்கள் கண்களை ஒருவர்க்கொருவர் குத்திக் கொள்கின்றனர். கல்லாமையும், வறுமையும் மக்களை சந்தாப்பவாதிகளுக்கு அடகு வைத்துவிட்டன. இந்நிலையில் எவர் தாம் பொறுப்புடன் செயல்பட வேண்டும என்ற வினா எழுகிறது.

சமயத் தலைவர்கள, அரசியல தலைவர்கள், படித்தவாகள் ஆகியோர் மட்டுமே இதுபோன்ற சமய, ஜாதி பிரசசனைகளுக்குத் தீர்வு காண முடியும். பதவிகளுக்காக மக்களின் உணர்சசியினைத் தங்களுக்காகப் பயனபடுத்திக் கொள்ளும் முயறசிகளை அரசியல வாதிகள் கைவிடுதல வேண்டும். குறுகிய மனப்பான்மையுடன், சமய வெறி கொண்டும் தங்களுடைய ஆனமீகத் தாகத்தினைத் தீர்த்துக் கொள்ளும் முயற்சியினை விட்டொழிந்து, இந்து சமயத்தின் மேன்மை உணர்த்திய சமயப் பெரியோர்களின தத்துவ அறவுரைகளை, அடிபபடை இந்து சமயப் பொதுமை உணர்வுகளை சமயத் தலைவர்கள் மககளிடையே பரப்ப முயறசி மேறகொளள வேண்டும. அடுத்தவன அமைதியாக வாழ்ந்தால்தான் நாம் நம வீட்டில மகிழ்சசியுடன் உண்டிட முடியும் என்பதை உணர்நது, கற்றறிந்தோர்கள் தன்னலப்பறறினை சற்றே தியாகம் செய்து, பிறர்நல நோககில-சமுதாய மேம்பாட்டில் சிறிதே மனங்கொண்டு முடிந்த அளவு ஆக்கப்பூர்வமான முயற்சிகளைக் கையாளுதல் வேண்டும்.

சமய, ஜாதி மற்றும் மொழிப பிரச்சனைகள் இந்திய மண்ணிற்குப் புதியதல்ல. அதனால் இப்பிரச்சனைகளால் எழும் பினவிளைவுகளை அன்றே நம ஆனறோரும், சானறோரும உணர்ந்திருந்தனர். இதனை நாம் நம் சமயத் தலைவா களின் வாழ்க்கையிலும், சமயச் சான்றோர்களின் இலககியங்களிலும காணலாம். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனும பெருங்கொள்கையினை இநதிய மணணில விதைத்து அதனை வளாககவும செய்தனர் அப்பெரு மக்கள. தாங்கள் வழிபடும் கடவுளர்களை உயாததியே பேசினாலும், பிற கடவுளாகளை இகழந்துரைக்கவிலலை. அதுவே அவர்களுடைய சமயப படைபபிலக்கியஙகளுககுப் பெருமை சோததது. நாயனமார்களும, ஆழவார்களும் இநது சமயத்தின் இரு கண் களான சைவ மற்றும வைணவப பயிரினைத தஙகள தோததிரங்களாலும, பாசுரஙகளாலும் வளர்த்தனர். கருத்து ஒறறுமைகளும், சொலலாட்சி அமைதிகளும், கறபனை வளங்களும் சமயப்பிரிவு பேதமின்றி பல இடங்களில் சைவ, வைணவ இலககியஙகளில ஒனறாகவே அமைநதிருபபதைப் பார்ததிடும்போது அவர்களதம சமயப் பொதுமை உணாவு தெரியவரும. இவவகையில ''ஐபபசியிலோணமவிட்டம சதயமிவை, ஒபபிலவா நாளகளுலகத்தீர் எப்புவியும் பேசு புகழ்ப் பொய்கையார், பூததத்தார், பேயாழவார் தேசுடனே தோன்று சிறபபால'' என்று மணவாள மாமுனிகள் ஒப்ப கூறியது போல முதலாழ்வாாகள் மூவரும ஒரே காலக்கட்டத்தில் வாழந்து ''தெண்ணீர் வயல் தொண்டை நனனாடு சான்றோரு டைத்து'' எனறு புகழபபெறும தொண்டை மண்டலததில் பிறநது, ஒரே நேரத்தில் மாயவனின லீலாவினோதத்தை உணர்ந்து, அவன திருவருள கிடைக்கப பெறறு, அவன புகழ் பேசும பாககள் பல புனைந்தனர். அத்தகு அவர்கள்தம் அந்தாதிப் பாக்களில் சைவ வைணவ சமயப் பொதுமை உணர்வினைத தோற்றுவிககும் வகையில் திருமாலையானை புகழநது பாடிய அவர்களுடைய சமய நெறி, சமய வெறியாளாகளை நல்வழிப்படுததும் எனபதில் சிறிதும் ஐயமில்லை.

வினை தீர்க்கும் அவ்நெடியோனின அருட் திறததினையும, அவன திருத்தலப் பெருமையினையும் பொய்கையார் தன பதினைந்து பாசுரஙகளாலும், பூதத்தாழ்வாா தன் எட்டுப் பாசுரங்களாலும், பேயாழ்வார் தன பத்தொன்பது பாசுரங்களாலும நேரிடையாகப புகழநதேத்தி, மலர்மங்கை மணாளன சமயப் பிரிவுகளுக்கு அப்பாறபட்டவன் என்பதை உறுதிப்படுத்தி, பிரிவுகளுக்கு வழி வகுக்காமல, இந்து சமய ஒறறுமைக்கு வித்திட்ட அவர்கள்தம் அருட்பண்பினை வியந்து, அவாதம் திருவடிகளை இதுபோது வணங்கிடுவோமாக!

# செய்திச் சுருக்கம்

17-9-89 அன்று காலை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலையில் சுவாமிகளுக்கு கோயில் மரியாதைகள் அளிக்கப்பட, தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவர் திரு. பட்டாபிரெட்டி மற்றும் பெயிஷ்கார் திரு. பி. ராமசந்தரய்யா ஆகியோர்களால் வரவேற்கப்பட்டார்.

ஃ ஃ ஃ

இந்தியத் துணைக்குடியரசுத் தலைவர் டாக்டர் சங்கர் தயாள் சர்மா அவர்கள் 14-9-89 அன்று திருமலைக்கு வருகை புரிநதார். திருமலையில் தி. தி. தேவஸ்தான செயலாட்சித தலைவர் திரு. சிஎச். வெங்கடபதி ராஜு, இணை செயலாட்சித் தலைவர் திரு. எஸ. ரமேஷ்குமார், தி. தி. தேவஸதான பொறுப்பாணமைக்குழு உறுப்பினர் திரு. எஸ். தேவநாதன் ஆகியோர்களால் வரவேற்கப் பட்டார். அன்று மாலை திருச்சானூரர் ஸ்ரீபத்மாவதிதாயார் கோவிலுக்கும் சென்று, தாயாரைத் தரிசித் தாா.

ஃ ஃ ஃ

திருமலை ஸ்ரீவேங்கடேஸவரசுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத் சவம் 2-10-89 முதல் 10-10-89 வரை வெகு விமரிசையாகக் கொண டாடப்பட்டது. 6-10-89 அன்று நடைபெற்ற கருடசேவையின் போதும, 9-10-89 அன்று நடை பெற்ற தேர்த்திருவிழாவிற்கும், இது வரையில்லாத அளவு ஆயிரக்கணக் கான யாத்திரிகப் பொதுமக்கள் திருமலைக்கு வருகை புரிந்தனர். கருட சேவையின் போது உத்சவர்க்கு ஆந திர அரசின் சார்பில் முதல்வர் திரு. என்.டி. ராமாராவ அவர்கள் பட்டுப் பீதாம்பரத் துணிகளை அளித்தார். அன்றே இந்தியப் பிரதமர் திரு. ராஜீவ்காந்தி சார்பில் சுமார் ரூ. 40,000 மதிப்புள்ள பட்டுத்துணிகள் உத்சவருக்கு அளிக்கப்பட்டது. இக்கருடசேவை விழாவிற்கு ஆந்திர மாநில மின்துறை அமைச்சர் திரு. பி. சுப்பையா, அறநிலையத் துறை அமைச்சர் திரு. கே. அப்பள நாயுடு தகவல்தொடர்பு அமைச்சர் திரு. விவேகானநதா ஆகியோரும் வருகை புரிந்தனர். இதுபோது முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவாகள் திருமலையில தி. தி. தேவஸதானம் நிர்மாணித்த காற்றாலை ஒனறினை துவககிவைத்தார். பின்னர் திருமலையில் தர்மகிரியிலுள்ள வேத விக்ஞான பீடத்தில் கட்டட வளாகம் ஒன்றினைத் திறந்துவைத்தார்.

ஃ ஃ ஃ

தி.தி. தேவஸதான பொறுப்பாண் மைக்குழுவின் தலைவர் மற்றும் புதிய உறுப்பினர்களாக பின்வரும் பிரமுகர் கள் 7-10-89 அன்று திருமலைக் கோயிலில் ஆநதிர முதல்வர் திரு. என் டி. ராமாராவ் முன்னிலையில், தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் அவர்களால் பதவி பிரமாணம் செய்விக்கப்பட்டார்கள்.

தலைவர் :
காலா வெங்கட்ராவ, எம.எல்.ஏ.

உறுப்பினர்கள் :

திருவாளர் என. ரங்கசாமிநாயுடு, எம்.எல்.ஏ.
,, கே. ஹரிஷவர் ரெட்டி எம்.எல்.ஏ.
,, எஸ. ராமசசநதிரா ரெட்டி, எம்.எல்.ஏ.
,, பாண்டு கிருஷ்ணமூர்த்தி எம்.எல்.ஏ.
,, டாக்டர் என். தேவநாதன் (சென்னை)
,, பி. ராமச்சந்திர ராஜு
,, சி. பிரகாஷ் அகர்வால்
,, ஆர்.பி. கோயங்க்கா —கல்கத்தா
,, நல்லி குப்புசாமிசெட்டி (செனனை)
திருமதி. ஈ. சீதாராமம்மா, எம்.எல்.ஏ.

ஃ ஃ ஃ

திருமலை - திருப்பதி தேவஸ்தான தர்ம பிரசார பரிஷத்தின் சென்னைக் கிளையின் சார்பில் மயிலாப்பூர் அப்பர் சுவாமி கோவிலில் நடநத நிகழ்ச் சியில் காஞ்சி எஸ. கே ரங்கமணி பக்தி சொற்பொழிவாற்றினர்.

மேலும், திருவேற்காடு கருமாரியம்மன் கோவிலில்—'நவக்கிரகநாயகி' திரைப்பட கதாசிரியரும் பல ஆயிரக கணக்கான தெய்வீக நாடகங்களை நடத்தியவருவான காஞசி எஸ். கே. ரங்கமணியின் தெய்வீக நாடகப்பற்றைப் பாராட்டி, திருப்பதி—திருமலை படிவிழா சங்க பொதுக்காரியதரிசியும திருப்பதி தேவஸ்தான-தர்ம பிரசார பரிஷத்தின் (தமிழக) அமைப்பாளரு மான ஆற்காடு ஆ. செ. நரசிம்மன அவர்கள், " தெய்வீக நாடகவேள் " எனனும் பட்டத்தை வழங்கினர். மயிலாப்பூர் கபாலீஸ்வரா கோவிலிலும், லஸ் ஆஞ்சநேயர் கோவிலிலும தர்ம பிரசார பரிஷத்தின் சார்பில் பக்திநிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன.

ஃ ஃ ஃ

**ராணிப்பேட்டையில கும்பாபிஷேகம்**

ராணிப்பேட்டை பஸ்நிலையம் அருகில் புதியதாகக் கட்டப்பட்டுள்ள வாழக்கரை அம்மன் ஆலய மகா கும்பாபிஷேகம் - காஞ்சிபுரம் உபநிஷத் மடம் பீடாதிபதி ஸ்ரீ அபயானந்தேந திர சரஸ்வதி ஸ்வாமிகள் முன்னிலையில் நடைபெற்றது. இதனை ஆற் காடு ஆ. செ. நரசிம்மன், ஸ்ரீ சுப்பிர மணிய சிவாச்சாரியார் ஆகியோா முன்னின்று நடத்தினர்களா.

ஃ ஃ ஃ

வடஆற்காடு பையயம்பாடி கிராமத்தில் 6-10-89 அன்று ஸ்ரீ சூக்த பாராயணம் மதுராந்தகம் பட்டாச் சாரியர் ராஜகோபாலாச்சாரியார் முன்னிலையில் வெகுச்சிறப்பாக நடை பெற்றது. ஸ்ரீமத் பி. எஸ். வெங்கட வரதாச்சாரியர் இலவசமாக சம்பாவனை வழங்கி எல்லோரையும் கௌரவித்தார். ★

# இருபத்தைந்தாவது தத்வ பொருள் சுருக்கம்



இக்கட்டுரையை எழுத இன்னும் ஒரு முக்கிய காரணமும்உண்டு. ஸ்ரீவைஷ்ணவ அன்பர்கள், பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார் வாழித்திரு நாமங்களை சேவா காலங்களில் சேவித்து வருவதை யாவரும் அறிந்ததே. பெரிய பிராட்டியார் வாழித் திருநாமத்தின் 6ம் அடியில் வரும் "இருபத்தஞ்சுட்பொருள் மாலியம்புமவள் வாழியே" என்று வருவதை வாசகர்கள் அறியலாம். 6-ம் அடியில் வரும்'இருபத்தஞ்சுட் பொருள்மாலியம்புமவள்' என்பது 25ம் தத்துவத்தை குறிப்பதாகும். எனவே இதன் பொருள் சுருக்கததை வாசகர்களுக்கு அளிக்க வேணடும் என்ற ஆசையே இக் கட்டுரையை எழுதலாயிற்று. தவிரவும் கம்பராமாயணத்திலும் கூட இந்த தத்துவங்களைப் பற்றி


**திரு. டி. கேசவ அய்யங்கார்**

அல்லூர்.


கவிச்சக்கரவர்த்திக் கம்பரும் குறிப்பிட்டிருக்கிறபடியால் அப்பாடல்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்து அதன பொருளும் கொடுக்கப்படுகிறது.

முன்னுரை:

தலைப்பைப் பார்த்ததுமே வாசகர்கள், இக்கட்டுரை ஏதோ வேதாந்த பரமாக இருக்கும், இவைகளைத் தெரிந்து கொள்ளத்தான் அவசியமா என்றும் எண்ணலாம். 24 தத்துவங்களுக்குப் பிறகுதானே 25வது தத்துவம் வரும். எனவேதான் முன் உள்ள 24 தத்துவங்களையும் மிக சுருக்கமாக விளக்கினல்தான் வாசகர்களுக்கு இக்கட்டுரையைப் புரிந்து கொள்ள சுலபமாக இருக்கும். பொதுவாக வாசக அன்பர்களுக்கு இதிஹாசம், புராணம், கவிநயம், காப்பியங்கள் முதலியவைகளைப் படிப்பதில் உள்ள ஆர்வம் போல் தத்துவங்களைப் படிப்பதில் அவ்வள வாக இருப்பதில்லை. சுலபமாக புரியும்படியாக எழுதுவதே இக்கட்டுரையின் நோக்கம். தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபாடு கொண்ட ஒரு சிலருக்காவது இக்கட்டுரை உபயோகமாக இருக்கலாம் என்பதை மனதில் கொண்டு எழுதப்படுகிறது. மற்றும்

" ஐயஞ்சாகிய தத்துவந் தெரிந்தறிந்த-
வற்றின்
மெய்யெஞசாவகை மேல் நின்ற
நினைக்கு மேல் யாதும்
பொய்யெஞ்சாவில் தென்னு
மீதருமறை புகலும்
வய்யஞ்சான்றினிச் சான்றுக்குஞ்
சான்றிலை வழக்கால்"

இப்பாடலை கம்பராமாயணம் யுத்தகாண்டம் மீட்சிப் படலத்தில்

## காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்?

பொதுவாகக் கிடைத்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற அர்த்தத்தில் மேற்கண்ட வாசகம் உபயோகப்படுத்தப் படுகின்றது.

**அதன் உண்மைப் பொருள்**

ஒருவர் இறந்தால் ஆங்கிலத்தில் BREATHED HIS LAST என்று கூறி வருகிறோம். அதாவது அவனுக்குள்ள கடைசி காற்றையும் சுவாசித்து விட்டான் என்று கூறுவது வழக்கம். ஏனெனில் ஒவ்வொருவருடைய ஆயுளும் அவரவர்களுக்குக் கொடுத்த மூச்சுக்காற்றுகளால்தான் நிர்ணயம் செய்யப்படுகிறதே ஒழிய ஆண்டுகளால் அல்ல. ஆகவே மேற்கண்ட பழமொழிக்கு விளக்கம் பின்வருமாறு :

உன்னுடைய மூச்சுக்காற்று உள்ளபோதே (அதாவது) உடலில் உயிர் உள்ளபோதே உன்னுடைய பாபத்தை தூற்றிவிடு—போக்கிவிடு—எப்படி? பகவன் நாமத்தைச் சொல்லி - குறிப்பாக நாம நாமத்தைப் சொல்லி - என்பதாகும். அதைத்தான் கவிச்சக்கரவர்த்திக் கம்பர் கீழ்க் கண்ட பாடலில் விவரித்துள்ளார்.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
திண்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
ஜன்மமும் மரணமும் இனறி தீருமே
இம்மையே ராமா எனற இரண்டு எழுததினுல்

தொகுத்தவர், யிமலே மணி-சென்னே

பிரம்மா ஸ்ரீராமனைத் துதிப்பதாககம்பர் கூறியுள்ளார்.

பாடலின் பொருள்:

இருபத்தைந்தான தத்துவங்களே ஆராய்ந்து பார்க்கும் போது இந்த இருபத்தைந்து தத்துவங்களுக்கும் மேல் இருபத்தாறுவது தத்துவமாய் நின்ற (அதாவது பரம்பொருளாய்) உனக்கு யேலே எதுவும் உண்மையில் கிடையாது என்று உண்மைப் பொருளே அறிந்த வேதங்கள் கூறுகின்றன. இதற்கு உலகத்திலுள்ள பெரியோர்களும் சாட்சியாக இருக்கின்றனர். ஏனெனில் சாட்சிக்கு வேறு சாட்சி தேவையில்லையன்றே.

மற்றெரு பாடல் :

"பகுதியெனறுளதி யாதினும் பழையது பயந்த
விகுதியால் வந்த விளைவு மற்றதற்கு மேல் நின்ற
புகுதி யாவர்க்கும் அரியவப் புருடனும் நீயும்
மிகுதியுள் பெருமாயையினுல் வந்த விக்கம்"

பொருள் :

எப்பொருளினும்பழமையானதான மூலப் பிருகிருதியென்று உள்ள தத்துவமும் அந்த மூலப் பிருகிருதி தந்த விகாரத்தாலுண்டான காரியங்களாகிய தத்துவங்களும் அந்த தத்துவப் பொருள்களனைத்துக்கும் மேலாய் நின்ற எவர்க்கும் கணடுணர்வதற்கு அரியவனை அந்த ஜீவாத்மாவாகிய தத்துவமும் ஆகிய எல்லாப்பொருளகளும் நீயே. மிகப் பரந்ததாக காணப்படுகிற இந்த பிரபஞ்ச தோற்றமெல்லாம் உனது பெரிய மாயையாகிய சங்கல்பத்தால் உணடான பரபரப்பாம்.

**தத்துவ விளக்கம் :**

பொதுவாக தத்துவங்களே சிலர் 24 என்றும் 25 என்றும் 26 என்றும் சிலர் 36, 96 என்றும் கூறியிருப்பதாலேயே வாசகர்களுக்குக் குழப்பம் ஏற்படக் காரணமாகிறது. தத்துவங்களேப் பலவிதமாகக் கூறுவதற்கும் இடமளிக்கிறது. அதற்குரிய காரணங்களுமுண்டு. இவைகளே எழுதினுல் கட்டுரைவிரிந்து வாசகர்களுக்கு கட்டுரையில் அலுப்பு ஏற்பட்டு விடும் என்ற காரணத்தால் முக்கிய 24 தத்துவங்களேக் கூறி 25வது தத்துவத்திற்கு விளக்கம் தரப்படுகிறது.

தத்துவங்களேப் பலர் பலவிதமாக சொல்லியிருந்த போதிலும் நம் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தின்படி தத்துவங்கள், "சித், அசித், ஈஸ்வரன்" என்ற மூன்று தனித் தத்துவங்களாகும். இதையே "தத்வத்ரயம்" என்பர். பரம காருணியகரான ஸ்ரீ பிள்ளேலோகாசார்யர், "தத்வத்ரயம்" என்ற தனி நூல் அருளிச்செய்துள்ளார். இதற்கு விசிதவாக்சிகாமணியான ஸ்ரீ மணவாள மாமுனிவர்களும் வியாக்யானம் அருளிச்செய்துள்ளார்.

ஒவ்வொரு வைஷ்ணவனும் முக்கியமாய் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் ரகஸ்யத்ரயம், தத்வத்ரயம், அர்த்தபஞ்சகம்" ஆகியவைகளாகும். ரகஸ்யத்ரயத்தில் முதலாவதாக இருக்கும் "திருமந்திரம்" என்கிற திருவெட்டெழுத்தின் பொருளே நன்கு அறிந்து கொண்டால் மற்றவைகள் சுலபமாகப்புரிந்து விடும் எனறு நம் முன்னேர்கள் கூறியுள்ளனர். (திருவெட்டெழுததின் பொருள் சுருக்கத்தை "ஸப்தகிரி" ஏப்ரல் 1986 இதழில் காண்க) சித், அசித், ஈஸ்வரன் என்ற பிரதானமான மூன்று தத்துவங்களேயும் நன்கு அறிநது கொண்டால்தான் அஞ்ஞானம் என்ற அறியாமை நீங்கும் என நம் பூர்வாசாரியர்கள் கூறியுள்ளனர். இங்கு அஞ்ஞானம் (அறியாமை) என்



அண்மையில் திருப்பதி அருகே உள்ள மங்காபுரம் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரர் கோயிலில் ''வேத வித்வத் சதஸ்'' ஒன்று தி.தி,தே. ஆதரவில் நடைபெற்றது. இதுபோது வேத விற்பன்னர்கள் பலர் கௌரவிக்கப்பட்டனர்.

பது சாரமே ஆத்மா, மனமே ஆத்மா ப்ராணனே ஆத்மா, புத்தியே ஆத்மா' இநதிரியங்களே ஆத்மா என்றிருப்பதும், ஆத்மாவைத் தவிர வேறு ஈஸ்வரன் என்பது கிடையாது என்ற அறியாமை நீங்க வேண்டும் என்று நம்முன்னோர் கூறியுள்ளனர்.

இந்த உலகத்திலுள்ள எல்லா அசையும் அசையாப் பொருள்களையும் நன்கு கவனித்தால் இவைகள் ஏதோ ஒரு தத்துவத்தில் அடங்கி இயங்குகிறது என்பது நன்கு புரியும். பொதுவாக ''ஓம்'' எனனும் ப்ரணவமானது சகல வேத சாரம என்றும் இவ்வுலகமும் ப்ரணவத்திலேயே அடங்கியுள்ளது என்றும் பெரியோர்கள் கூறியுள்ளனர். நம் ஸித்தாநதத்தின்படி தததுவம் மூன்று. இவைகளை விவரணமாக்கினுல் ஈஸ்வரனை சேர்த்து 26 தத்துவமாகிறது என்பர். ப்ரணவத்திலுள்ள மூன்றுஎழுத்துக்களில் கடைசி எழுத்து 'ம' என்பதாகும். ஸ்ரீபிள்ளை லோகாசாரியார், ''முமுக்ஷுப்படி'' என்ற நூலில் ''திருமந்திரப்ரகரணம் சூத்திரம் 66ல் மகாரம் இருபத்தைந்தாம் அக்ஷரமாய் ஞானவாசியுமாயிருக்கையிலே ஆத்மாவைச்சொல்லுகிறது'' என்று கூறியுள்ளாா. பரமாசார்யரான ஸ்ரீ ஆளவந்தாரும் தாம் இயற்றிய ஸித்தித்ரயத்தில் ஆத்ம ஸித்தியில் ஆத்மாவின் சொரூபம் ஆராயப்பட்டு ஸித்தாந்தப்படுத்தியுள்ளார்.

இந்த 'ம' என்ற எழுத்தானது வடமொழி எழுத்துக்களின்படி க$_1$ க$_2$ க$_3$ க$_4$ ங ச$_1$ ச$_2$ ச$_3$ ச$_4$, ஞ, ட$_1$ ட$_2$ ட$_3$ ட$_4$ ண, த$_1$ த$_2$ த$_3$ த$_4$ ந, ப$_1$ ப$_2$ ப$_3$ ப$_4$ ம என்றபடி 'ம' 25வது எழுத்தாக வருகிறது. இதைச்சுருக்கமாக ''க'' வர்க்கம் ''ச'' வர்க்கம் 'ட' வர்க்கம் 'த' வர்க்கம், 'ப' வர்க்கம் என்று கூறலாம். இந்த வர்க்கங்களின் மூலம் நாம் தெரிநது கொள்வது யாது என்று நம் பூர்வாசார்யர்கள் பின்வருமாறு கூறியுள்ளனர். அதாவது 'க' வர்க்கத்திலுல் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற பஞ்சபூதங்கள் 5ம்,'ச' வர்க்கத்திலுல் கை, கால், குய்யம், வாய் குறிகள் என்ற கர்மேந்திரியங்கள்5ம். 'ட' வர்க்கத்திலுல் மூக்கு, நாக்கு, கண், தோல், காது ஆகிய ஞானேந்திரியங்கள் 5ம், 'த' வர்க்கத்திலுல் மணம் சுவை, உரு, ஊறு, ஒலி என்ற விஷயங்கள் 5ம், 'ப' வர்க்கத்திலுல் மனது அகங்காரம், மகத்து, பிருகருதி ஆகிய 4ஐயும் சேர்த்து மொத்தம் 24 தத்துவங்களுடன் கூடிய பிருகிருதியின் கார்யாவஸ்தையே சரீரமாக விளங்குகிறது. இதற்கு ஞானம் என்ற அறிவு இல்லையென்பதால் ''அசித்'' என்றும் சொல்லலாம் என்பர். முன கூறப்பட்டவர்க்கங்களில் 24 எழுத்துகளுக்குப்பிறகு 'ம' என்ற மகர்ரம் எழுத்து வருகிறது. முன் 24 எழுத்துக்களிலுல் கூறப்படும் சரீரத்தைக் காட்டிலும், அப்பாற்பட்ட வஸ்து ''ஆத்மா'' என்பதை இந்த 'ம' என்று எழுத்து குறிக்கிறது என்று கூறியுள்ளார். தவிர இந்த 25வது எழுத்தான மகாரமானது ''மன = ஞானே, மன = அவபோதனே'' என்கிற தாதுவில் பிறந்து, அத்தாதுவின் பொருளைக் கொடுக்கிறது. இந்த மகாரத்தின் பொருளை ஸ்வாமி வேதாந்த தேசிகன், ''திருமந்திரச் சுருக்கு'' என்னும் தன் பிரபந்தத்தின் 5-ம் பாசுரத்தில் கீழ்கண்டவாறு கூறியுள்ளார்.

''தத்துவ மறுநான் கோடு தனியிறை
யன்றி நின்ற
சித்தினை யுணரா தென்றுந்
திரடொகையாகி நின்றீர்
மத்தனை தனிவிடாதே மையிலா
விளக்கமாக்கி
யுத்தம னடிமை யான் உயர்நிலை
யுணர்மி னீரே''

இதன் பொருள் :

சப்த,ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்த என்னும் 5 தன்மாத்திரைகள், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் 5 ஞானேந்திரியங்கள், வாய், கை, கால், குய்யம், குறிகள் என்னும் 5

தறகும நம ஆறதாயாயஙகளை உதவு கிறது. விரிவுக்கு அஞ்சி இத்துடன் விடப்படுகிறது.

முன்னால் கூறப்பட்டுள்ள தத்து வங்களையெல்லாம் எம்பெருமான் தனக்கு ஆபரணமாகவும், ஆயுதமாக வும் அணிந்து கொண்டுள்ளான் என்று ஸ்வாமி வேதாந்த தேசிகன் அதிகார சங்கிரகம் பாசுரம் 41ல் கூறியுள்ளார்.



அண்மையில் திருமலே தர்மகிரியில் ஆந்திர முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்களால் திறந்து வைக்கப்பட்ட வேதவிக்ஞான பீடத்தினைச் சார்ந்த சிலகுடில்கள்

கர்மேந்திரியங்கள், அப்பு,தேயு, வாயு பிருதிவி, ஆகாசம் என்னும் 5 பூதங் களும், மனம், அகங்காரம், மஹத், மூலப் பிருகருதி ஆகிய தத்துவங்கள் 4, ஆக தத்துவங்கள் 24ஐக் காட்டி லும், ஜீவன் வேறுபட்டவன். அவ் விதமே ஈஸ்வரனைக் காட்டிலும் வேறு பட்டவன்' இங்ஙனம் அசே தன ஈஸ்வரன் தத்துவங்களைக்காட்டி லும் வேறுபட்டு நிற்கும் ஆத்மா வினுடைய ஸ்வரூபத்தை தனக்கு அறி யாமல் பூதங்கள், இந்திரியங்கள் இவற்றின் குவியலாய் நிற்கும், அசே தனமான சரீரத்தையே ஆத்மா வெனக் கொண்டு அறிவிழந்து கிடக் கும் சேதனாகளே! மகாரத்தின் அர்த்தமாகிய ஆத்மாவை ஸ்வதந்த் ரன் என்று நினைக்க வேண்டாம். மகாரமாகிய ஆத்மாஞானஸ்வரூபன் என்பதை உணர்ந்து, எம்பெருமா னுக்கு அடிமையாயிருப்பதே ஆத்மா வின் ஸ்வரூபமென்பதைக் கண்டு உஜ்ஜீவியுங்கள். (தேசிகபிரபந்தம் உரை, வங்கிபுரம் ஸ்ரீராம தேசிகாச் சார்ய ஸ்வாமி, ஒப்பிலியப்பன் கோவில்.)

எனவே மகாரத்திற்குரிய பொருள் அறிவுடையதாக இருத்தல்வேண்டும். அந்த அறிவு தன்னைத்தான் உணர வும் உணர்வதற்கு சாதனமாயிருக் கும். இதனால் ஞானமயன், ஞான ஸ்வரூபியாகவும் இருக்கும் ஆத் மாவை 'ம' காரம் சொல்லுகிறது என்று ஸ்ரீஉலகாசார்யரும் கூறியுள் ளார்.

ஸ்வாமி தேசிகனின் பாசுரத்தில் வரும் தன் மாத்திரை என்பதை மட் டும் சுருக்கமாக விளக்கப்படுகிறது. தன் மாத்திரை என்பது ஒரு வஸ்து வானது தன் நிலையிலிருந்து மாறு பட்டு வேறொரு வஸ்துவாக மாறும் நிலைக்குமுன உள்ள இடைநிலைதான் தன் மாத்திரை எனப்படும். உதா ரணம் காட்டி விளக்குவோம். பாலைக் காய்ச்சி தயிர்ஆவதற்கு பிரை ஊற்று கிறோம. சிறிது நேரம் கழித்துதான் பாலின் தன்மை மாற ஆரம்பிக்கும். ஆனால் முழுவதும் தயிராக ஆவதற்கு அதிக நேரம் ஆகும். இந்த இரண் டுக்கும் உட்பட்ட பாலின் இடை நிலைக்குத்தான தன்மாத்திரை என்று பெயர். இவ்வாறே ஒரு பூதம் மாறி வேறு பூதமாக மாறுவ தற்கு பூதத்தின் தன்மை உருவாகி, பூதத்தின் தன்மையையும் உணர்வ

"புருடன் மணி வரமாகப் பொன்று மூலப்
பிருகருதி மறுவாக மான்றன் டாகத்
தெருள் மருவாளுறையாக வாங்கா ரங்கள்
சார்ங்கஞ்சாப மாக மனந் திகிரியாக
விருடீகங்க ளீரைந்துஞ்சரங்களாக
விருபூத மாலைவன மாலையாகக்
கருடனுரு வாமறையின் பொருளாங் கண்ணன்
கரி கிரிமே னின்றனைத்துங் காக்கின்றானே"

இதன் பொருளாவது:

கருடனுடைய சரீரமாய் நிற்கின்ற வேதத்தின் பொருளாக நிற்கும் எம் பெருமான், ஜீவனை (ஆத்மாவை) ரத் னங்களுக்குள் சிறந்த கௌஸ்துப ரத்னமாகவும், அழியாத மூலப் பிர கிருதியை "ஸ்ரீவத்ஸம்" என்னும் மருவாகவும் "மஹத்" என்ற தத்து வத்தை "கௌமோதகீ" என்னும் கதையாகவும், "ஞானம்" என்பதை "நந்தகம்" என்னும் கத்தியாகவும், அஞ்ஞானத்தை கத்தியின் உறை யாகவும், தாமஸஅகங்காரத்தையும் ஸாத்வீத அகங்காரத்தையும முறையே "சார்ங்கம்" எனனும் வில் லாகவும், "பாஞ்சஜந்யம்" என்ற சங்குவாகவும், மனதை "சுதர்ஸனம்" என்னும் சக்ராயுதமாகவும், கர்மேந் திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங் கள ஐந்து ஆக இந்திரியங்கள் பத் தையும் அம்புகளாகவும், தன் மாத் திரை ஐந்து, பூதங்கள் ஐந்து ஆகிய பத்தையும் வனமாலையாகவும்,

(41-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ அஹோபில க்ஷேத்ரம்

ஸ்ரீ அஹோபில க்ஷேத்ரமானது கர்நூல ஜில்லாவில் சிறுவல தாலுகா விலுள்ள ஒரு பாடல் பெற்ற விஷ்ணு ஸ்தலம். திருப்பதிக்கு வடக்கே இந்த வைஷ்ணவ க்ஷேத்ரத்தைக் காட்டிலும் உத்க்ருஷ்டமான க்ஷேத்ரம் கிடையாது. இந்த க்ஷேத்ர மானது நல்ல மலைத்தொடரின்மேல் உள்ளது. இந்த மலைத்தொடரின் சிரோபாகத்தில் ஸ்ரீ திருப்பதியும், மத்திய பாகத்தில் ஸ்ரீ அஹோபில மும், நுனி பாகத்தில் ஸ்ரீசைலமென்ற சிவ க்ஷேத்ரமும் இருக்கின்றன. இம் மூன்று புண்ய க்ஷேத்ரங்களும் இம் மலைத்தொடரின்மீது இருப்பது பற்றித்தான் இம்மலைக்கு 'நல்ல மலை' என்று பெயர் ஏற்பட்டது போலத் தோன்றுகிறது.

---

*திரு இல பாஷ்யம்-திருக்குடந்தை.*

---

இந்த அஹோபில க்ஷேத்ரமானது ஸ்ரீரங்காதி திவ்ய க்ஷேத்ரங்களுடன் துல்யயோக க்ஷேமமாக பரிகணனம் செய்யப்பட்டிருக்கிறதென்று தெரிய வருகிறது

அதாவது ஸ்ரீ முஷ்ணம், வேங்கடா சலம், ஸாளக்ராமம், நைமிசாரண்யம், தோதாத்ரி, புஷ்கரம், நரநாராயணாச்ரமம், ஸ்ரீரங்கம், வருஷபாத்ரி, நாராயணகிரி, அனந்தசயநம், பில வாசலம், திருக்குறுங்குடி, மலயா சலம், ஹரசாபஹரம், ஸிம்ஹாத்ரி, அஹோபிலம் ஆகிய இப்பதினேழு க்ஷேத்ரங்களும் பகவானுக்கு நித்ய வாஸத்துக்குத் தகுந்த ஸ்தலங்கள்.

அஹோபில நருஸிம்ஹனைச் சுற்றிலும் மூன்று யோசனை விஸ்தீர்ண முள்ள இவ்க்ஷேத்ரமானது, கயா, ப்ரயாகை, காசி இவைகளைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகமான மேன்மை யுடன் கூடியது என்பது உண்மை. பித்ருக்களை திருப்தி செய்வதற்காக கயைக்குப் போக வேண்டும். தன சரீரத்தை விட்டுவிடுவதற்காக கங்கைக்குப் போக வேண்டும். தன்னைக் காப்பாற்றக்கூடிய மந்த்ரோபதேசத் திற்காக காசிக்குப் போக வேண்டும். இம்மூன்றுக்கும் ஒன்று சேர்ந்து ஸ்ரீ அஹோபிலம் ஒன்றுக்குப் போனால் போதுமானது.

காசி க்ஷேத்ரத்தில் ஒருவன் ஆயிரம் யுகம் வஸிப்பதும், ப்ரயாகை க்ஷேத்ரத்தில் இருபது யுகம் வஸிப்பதும், கயா க்ஷேத்ரத்தில் நூறு யுகம் வஸிப்பதும், ஸ்ரீ அஹோபிலத்தில் ஒரு தினம் வஸிப்பதற்கு ஸமம்.

கயா க்ஷேத்ரத்தில் பதினாயிரம் பேருக்கு அன்னதானம் செய்வதும், ப்ரயாகை க்ஷேத்ரத்தில் லக்ஷம் பேருக்கு அன்னதானம் செய்வதும், காசி க்ஷேத்ரத்தில் இரண்டு லக்ஷம் பேருக்கு அன்னதானம் செய்வதும், ஸ்ரீ அஹோபில க்ஷேத்ரத்தில் ஒரு கவளம் அன்னதானம் செய்வதற்கு ஸமம் ஆகும்.

ஸ்ரீ அஹோபில க்ஷேத்ரத்தில் தானம் செய்யப்பட்ட த்ரவ்யம் அணுவளவாக இருந்த போதிலும், சிறிய ஆலமரத்தின் விதையானது, பெரிய மரமாவதுபோல, மேருபர்வதத்தினளவு வ்ருத்தியாகின்றது. பஞ்சமஹா பாபங்களையும் பஸ்மமாக அழிக்கக்கூடிய இந்த அஹோபில மென்ற மஹாமந்திரம் காலையில் எழுந்தவுடனே மூன்று தரம் சொல்லத் தகுந்தது. உத்தமமான நான்கு அக்ஷரமாய் நான்குவித புருஷார்த்தங்களையும் தரக்கூடியதாய், ப்ரஹ்மாவினால பூஜிக்கப்பட்டதாயு மிருக்கின்றது

கருடாசலம்

இவ்வளவு பெருமை வாய்ந்த திவ்ய க்ஷேத்ரத்தில கருடாசலம் என்று ப்ரஸித்தி பெற்ற ஒரு மலை இருக்கின்றது. இந்தப் பர்வதத்திற்கு இப்பெயர் வந்ததற்குக் காரணம் பினவருமாறு: முன் ஒரு புண்யமான க்ருதயுகத்தில் கச்யபரின் புத்ரரான கருடன் தன் தகப்பனாரின் நியமனத்தில் பேரில அஹோபில க்ஷேத்ரத்திலிருக்கும் இம்மலையில் உக்ரமான தபஸை செய்தார். இந்த உக்ரமான தபஸை தேவதைகள் எவ்வளவு கெடுக்கப் பார்த்தும் அவர்கள் க்ருஷி பலிக்கவில்லை. கடைசியாய் ச்ரிய: பதியான பகவான், கருத்மானுக்கு ப்ரஸன்னராய், கருத்மானின திருவுள்ளப்படி அவருக்கு இரண்டு வரங்களை அளித்தார். முதலாவது வரம: 'இது முதல், என்னைத் தேவரீருக்கு வாஹனமாகக் கொள்ளும். ஜகத்தில் உளள சராசரங்கள் ஸர்வத்திற்கும், ஆதாரமாகிய தேவரீருக்கு வாஹன மாக இருத்தல் பெரும்பேறு.'

இரண்டாவது வரம்: 'இந்த மலையில் வெகுகாலமாய நான் வஸித்து வந்தேன். தேவரீரைக் குறித்து தவம புரிந்து இங்கே ஸித்தி பெற்றேன். ஆகையால் இதற்கு என்னுடைய பெயரை வைக்கக் கடவீர்.'

பவநாசிநியின் தென் கரையில் இருக்கிற பர்வதத்திற்கு அது முதல் கருடாசலம என்று பெயர் உண்டாயிற்று.

வேதாசலம:

வேதாசலம் என்று பெயருடைய பர்வதம கருடாசலத்திற்கு ஓர் அங்க

மாக இருக்கின்றது. இநத பர்வதத் திற்கு இப்பெயர் வநதத்ற்குக் கார ணம பின்வருமாறு:

முன் ஒரு கருதயுகத்தில் துஷ்ட புத்தியையுடைய க்ரூரனுன ஸோமகன் என்று ஒரு ராக்ஷஸன இருந்தான். இவன தன் பராக்ரமத தினுலே ப்ரஹ்மாவினிடத்தில்இருந்து வேதங்களை அபகரித்துக் கொணடு போய்விட்டான். தனககுக் கணகளும் தனங்களுமான வேதங்களைப் பறி கொடுத்த சதுர்முகன் சுருணை சோர்நத கணககனைப் போலே நீர்க் கிடை, நிலக்கிடை அறியாதே மிக வும் கஷ்டப்பட்டான. வாணுசரம தர்மங்கள் ஸரிவர நடக்காமல் போயின. அப்பொழுது சரிய: 'பதி யாகிய பகவான ஸோமகன் எனற ராக்ஷஸனைக் கொன்று ப்ரஹ்மாவுக்கு மறுபடியும வேதஙகளைக் கொடுத தாா. வேதஙகள தங்களுககு அடிக கடி ஏற்படும் கஷ்டங்களிலிருந்து ஒரு வாறு நிவ்ருத்தியடையவேணடியதற காக பகவானைககுறித்துக் கடும் தபஸ் செய்தா. வேதஙகளின் தபஸினுல் ப்ரஸன்னனுன ஸ்ரீ ந்ருஸிமஹன, வேதஙகளின முன்னே தோனறி அவைகளுக்கு ஒரு நாளும ஒருவித அவமானமும உணடாகப போகிற தில்லை என்றும், எவாகள் வேதஙகளை நிநதிககிறுர்களோ அவாகள எல லோரும பாஷணடிகள என்றும, இதி ஹாஸ, பிராண, ஸமருதிகளைக காட் டிலும வேதங்கள மேன்மையுடன கூடினவைகள் எனறும வரமளித தான.

இதுவுமிலலாமல இது முதல இநதப் பாவதம வேத பர்வதம் என்ற பெயருடன விளஙகப போகிறது எனற வரததையும் அளித தார் ஸ்ரீ ந்ருஸிமஹன்.

அசலசசாயமேரு.

கருடாசல, வேதாசல மததியில் அசலசசாயமேருயெனற பெயருடன கூடின பாவதம ஒன்று இருககிறது.

பவநாசிநீ:

அசலச்சாயமேரு எனற பாவதத தின மததியில் ஜ்வாலாநருஸிம்ஹன் ஹிரணயகசிபுவின் ஸமஹாராாத்த மாகவும, ப்ரஹ்லாதனை ஸம்ரக்ஷிப் பதறகாகவும, ஹிரணயகசிபுவின் க்ருஹஸதம்பததில் தோன்றினுர். கோடி ஸூர்யனுககு ஸமானமான காந்தியுடன கூடின ஜ்வாலாந்ருஸிம ஹனுககு சாந்தி உணடாவதற்காக தேவகணஙகள மூனறு லோகத்திலும பெருகி வருகிற கங்கையை அழைத துக கொண்டு வநது மிகுநத பக்தி யுடனும், ப்ரீதியுடனும திருமஞ் ஜனம செய்து வைத்தார்கள். அந்த தீர்த்தம் வெகு பயங்கரமாய் மேறகு திக்கு நோக்கிப் பெருகி வருகிறது.

ஸாவ தீாத்தங்களுக்குள் பவநாசிநீ மிகவும உததமமானது. ஒருவன் ஸ்ரீ அஹோபில க்ஷேத்ரத்திற்குப போய், பவநாசிநியையும் ஸேவித்து விட்டால், கோடி ஜன்மஙகளில் பண ணிய பாபங்களெல்லாவறறிலுமிருந் தும் விடுபட்டவனுக ஆகிறுனென பதில் சந்தேஹமே கிடையாது. ஜநங் களின ஸமஸார துக்கத்தைப்போக்கி பரிசுத்தமாக்குவதால 'பவநாசிநீ' எனறு பெயர் வநதது

ஒரு புணணிய நதியில் மற்றெரு புண்ய நதியை பரசமஸிக்ககூடாது எனபது சாஸதரஸித்தம். ஆனுல் கங்கையையும் பவநாசிநியையும அப படிப பிரசிம்ஸிககலாம் என்று ஒரு புராண ஸ்லோகத்தால் தெரிய வருகிறது.

இநத பவநாசிநீ தீர்த்தககரையில் தான காவலத் என்னும மஹாமுனி வா பகவானைக் குறிததுக் கடும தவம் புரிநது, பகவான ப்ரஸனனமாய அவ ருடைய கருபைக்கு பாதரபூதரா யினுர்.

இநத புணய நதியில பதினமூனறு புணய தீர்ததஙகள் இருககின்றன. அவையாவன:

நரஸிம்ஹ தீர்ததம, லக்ஷமண தீர்ததம், சஙக தீாததம, சுதாசன தீர்த்தம், தாரா தீர்த்தம், வைநாயக தீர்த்தம், ராம தீர்த்தம், பீம தீர்த தம, வராஹ தீர்த்தம், சூத தீர்த தம், கஜ குணடம, பைரவ தீர்ததம, ரதத குணடம

இவைகளைத் தவிர இன்னும அநேக தீர்ததஙகளும் இருக்கினறன.

நவ நருஸிமஹ க்ஷேத்ரம

ஸ்ரீ அஹோபிலததிறகு நவ நரு ஸிமஹ க்ஷேதரம் எனற ஒரு பெயா உணடு. அநத திவய தேசத்தில எழுநதருளியிருககும் ஒனபது நரு ஸிமஹ மூர்ததிகளின திருநாமங் களாவது' ஜவாலா ந்ருஸிமஹன, அஹோபிலந்ருஸிமஹன. மாலோநரு ஸிமஹன என்கிற ஸ்ரீலக்ஷமீ ந்ருஸிம ஹன, கரோடாகார நருஸிமஹன, காரஞ்ஜ ந்ருஸிம்ஹன், பார்ககவ நருஸிம்ஹன, யோகாநநத நருஸிம் ஹன, சதரவடநருஸிமஹன, பாவந நருஸிமஹன் ஆக ஒனபது திவய நருஸிமஹ மூாததிகள். இபபடிப் படட ஒனபது நருஸிம்ஹன் ஸநநிதி களில மூனறு கீழ் அஹோபிலததிறகு ஸமீபத்திலும மறற ஆறும மேல அஹோபிலத்திற்கு ஸமீபததிலும இருககினறன.

கீழ அஹோபிலம.

கீழஹோபில தேவாலயம் மூனறு பராகாரமுள்ளது. வெளி பராகாரம் கோபுரதவார சேஷமாய் நிறகிறது. இரணடாம ப்ராகாரம் பாதிக்குமேல் நிலைத்துநின்று மிகுதியான பாகம ஜீர்ணிததிருககிறது. முதல் ப்ரா காரம முழுவதும் நிலைததிருககிறது ஸனனதியின முன மஹா மணடபம உயாநத வேலைபபாடுடன கூடிய ஸ்தம்பங்கள் நாட்டிக்கட்டப்பட்டி ருக்கிறது.இநத ஸ்தமபஙகளினுடைய வேலைத்திறம் மிகவியககத்தககது. ஸந்நிதி வீதி எனபது இருபுறமும மண்டபம அமைந்து மத்தியிலும மண டபஙகளுடன கூடியிருக்கினறது. முற்காலத்தில இரண்டாம் ப்ரா காரத்தைச சுற்றி அநேக கருஹங

கள இருந்ததாகத தெரிய வருகிறது. ஸந்நிதியின மண்டபம விஜயநகரம மஹாராஜாவான கிருஷ்ணதேவரா யனுல கட்டபபட்டது. இவா காலம கி. பி. 1509-1529. அநத ஸமயத்தில் இநத அஹோபிலமட திவயா ஸதானததில ஏழாவது பட்டததில மூர்த்தாபிஷிகதராய 'சதலேகிநீ லேகநரநுகுண கவிதாதுரநதர கவி தாாககிக கணடீரவ ஸ்ரீவணசட கோப யதீநதர மஹாதேசிகன' எழுநதருளியிருநதாா. இவவழகிய சிஙகரின ஆஸதான காலம கி பி. 1512-1521. இதில வருததயதியான ஸ்ரீலக்ஷ்மி ந்ருஸிம்ஹனையும அவரிடத தில் காஷாயாதிகளை ஸ்வீகரிதத ஸ்ரீ மதாதிவணசடகோப யதீந்த்ர மஹா தேசிகனேயும பரதிமா ரூபமாய ஸேவிககலாம. இநத மண்டபம் முடி வதறகு முன அரசன காலஞ் சென்ற படியால, இது முடிவை அடையாமற போய் விட்டது போலும இநத ஸந்நிதியிலுள்ள பகவான, ஹிரண்ய கசிபுவிஞல ஸமுதரததில் தள்ளப் பட்டு மலேயினுல் மூடப்பட்ட ப்ரஹ லாதனுக்கு எதிரில் வந்து தோன்றின 'பரஹ்லாத வரதன்'. இவரது வைபவம ஸ்ரீ விஷ்ணு புராணத்தில பிரஸித்தம். இவர் இநத க்ஷேத்ர மாஹாத்மயததிற சொலலப்பட்ட ஒனபது ந்ருஸிம்ஹர்களில சோந்த வரல்லர், இவர் வேங்கடாசல மாஹாதமய பரதிபாததியா, ஆகாச ராஜ புத்திரியாய் அவதரித்த பத்மா வதிககும ஸ்ரீநிவாஸனுககும வைவா ஹிக மஹோதஸவம நடநதபொழுது பிராட்டி பகவதாராதந பூர்வகம ததீயாராதநம பணணித தனனைப பாணிகரஹணம பணணிககொள்ளு மாறு வேணட ஸ்ரீநிவாஸனும ஸ்ரீ லக்ஷ்மி ந்ருஸிமஹனை அஙகு எழுந தருளப பணணி ஆராதிததுத் ததீயா ராதநத்தை நடததிப் பாணிக்ரஹ ணம் பணணிக் கொணடதாக அப் புராணங்கூறும.

இச்சநநிதியின தெறகிலுள்ள மண டபத்தில் இப்பொழுதும் ஸ்ரீநிவா ஸன எழுநதருளியிருககிறுர். இம மணடபததைக் கலயாண மண்டபம என்று இப்பொழுதும வயவஹரிக கிருாகள. இநதக கலயாண மணடபம 64 தூணகளுடன் கூடியது. இது 14-வது நூற்றுண்டில 'கொணட வீடு ரெட்டிகளால்' கட்டப்பட்டதாகச் சொலலுகிருாகள. அநத மணடபத் திலதான நம் ஸ்ரீ அழகிய சிஙகர்கள ஸஙகலபமஹோத்ஸவம நடத்தின ஸமயததில ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹன எழுநதருளியிருந்தார்.

இவ்விடத்தில் (1) ஸந்நிதி கோனேரி, (2) ஆழ்வார் கோனேரி, (3) லஞ்சா கோனேரி என்று மூன்று தீர்த்தமுள்ள கோனேரிகள் இருக் கின்றன. (1) ஸந்நிதி கோனேரி நன்றுய் கட்டப்பட்டு நானகு பககங் களிலும மண்டபங்களுடன் கூடினதா யிருக்கிறது. (2) ஆழ்வாா கோனேரிக் கரையின்மீது நம்மாழ்வார் ஸந்நிதி ஒன்று இருக்கின்றது. இநத கோனேரி யில் முன் காலத்தில் தெப்போத ஸவம நடந்ததாகச சொல்லுகிருர் கள.

கீழஹோபிலம ஸந்நிதிக்கு வெளி யில ஒரு ஜயஸ்தம்பம் காணப்படு கிறது. இதன விவரம் பின்வருமாறு: 'ஸ்ரீ அஹோபிலம் ஸந்நிதி 1577-வது வருஷத்தில துருஷ்கர்களால ஆக்ரமிககப்பட்டது ஆலயததிற் குள்ளிருந்த சகல சொத்துககளும அபஹரிககப்பட்டன, அப்பொழுது 'ஹாணடி' என்று சொல்லப்படும சைவாகளும இநதக காரியததில துருஷ்காகளுக்கு மிகுநத ஸஹாயம செய்தாாகள. ஆனல ஆராதநாதி கள் மாத்திரம் நிறுததப்படவிலலே. ஸேவார்த்திகளாக வருபவாகளிட மிருந்து பெரியதொரு வரிவசூல செயது கொணடு அதனல் ஏராள மான த்ரவ்ய ஸமபாதனத்தைச் செய்து வநதபடியால் துருஷ்கர்கள் ஆராதநத்தை நிறுத்துவதை உசித மாக எண்ணவிலலே. இப்படிசற்றேறக் குறைய ஏழு வருஷங்கள் கழிந்தன: அப்பொழுது இந்த அஹோபில மட திவ்ய ஆஸ்தானத்தில் பதினேராவது பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ ஸ்ரீநிவாஸ யதீந்த்ர மஹாதேசி கனின காலமாக இருந்தது இம் மஹானின் ஆஸ்தான நிர்வாஹ காலம கி. பி. 1559-1598. இவர் ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹனிடமிருந்து ஸ்வ ப்நததில் ஓர் ஆஜ்ஞையைப் பெற்ற வராய், அப்பொழுது பெனுகொண் டாவில ராஜ்ய பரிபாலநம் செயது வநத ரங்கராயரெனனும் விஜய நகரம மஹாராஜனிடம போய், (இவ் வரசன காலம் கி பி. 1575-1586). 'மஹாராஜனே! திருமலை ராஜு என றும், வெங்கிடராஜு என்றும் உம மிடம இரண்டு அதிகாரிகள் இருக் கிறுர்கள். அவர்களை நததக ஸைநய ஸஹாயத்துடன நமமோடு அனுப்ப வேணடும. அவர்கள ஸ்ரீ அஹோ பிலத்திலிருக்நம துருஷ்கர்களை அடித்துத் துரத்திவிட்டு முனபோல அநத ஸநநிதியை நமமுடைய ஸவாதீ நஞ் செய்து கொடுப்பார்கள். இப் படி பகவான் நமககு ஆஜ்ஞாபித திருக்கிறா' என்று சொல்லவே அநத மஹாராஜன மிகவும் ஸந்தோஷம் அடைந்து தானே அந்த யுத்தத்திறகுப் போக வேணடுமென கிற எணணந் தனக்குத தீவிரமாக உணடாகையிலும், பகவதாஜ்ஞை இலலேயெனனுங் காரணத்தால, தன் னுடைய உத்ஸாஹத்தை அடக்கிக் கொண்டு தனனுடைய அதிகாரி களான அவ்விருவரையும ஸ்ரீ அழகிய சிங்கர் நியமநபபடி சதுரஙக ஸைந யத்துடனும மஹார்ககஙகளான உப ஹாரத்துடனும்ஸ்ரீ அஹோபிலத்தை நோக்கி அனுப்பினுன். அந்த அதி காரிகள் ஸ்ரீ அழகிய சிங்கரை ஸேனை முகத்தில் எழுநதருளப பண்ணிக் கொணடு போய், ஸ்ரீ அஹோபிலத தில் துருஷ்கர்களுடன யுததஞ் செய்து, அவாகளை அடித்துத் துரத்தி விட்டு ஸந்நிதியை ஸ்ரீ அழகியசிங் கருக்கு மீண்டும் ஸ்வாதீனம் செய்து கொடுத்தாாகள். இந்த ஜயத்தை ப்ரஸித்தம் செய்வதற்காக ஸ்ரீ அழ

கியசிங்கரும் அவவிடத்தில் ஒரு ஜய ஸ்தம்பமான சரித்திரத்தையும் சிலே யில் எழுதி வைததிருக்கிருா. இப் படிப்பட்ட காரியத்தைச் செய்து வைத்த மஹாராஜனுக்கு பாரிதோஷி கமாக ஒரு பரிவட்டம ஸ்ரீ அழகிய சிங்கர் ஸாதிததருளினதாக தெரிய வருகிறது. இநத சிலா சாஸநம் 1584-ம் வருஷத்தில் எழுதப்பட்டது என்று அந்த சாஸநத்திலிருநதே தெரியவருகிறது

இககீழஹோபிலத்திலுள்ள உத்ஸ வர் 'ப்ரஹலாத வரதன்', மூலபேரம ஸ்ரீ நருஸிமஹன. இவவிடத்திலே தான், நவந்ருஸிம்ஹ ஸந்நிதிகளேச சேர்ந்த உத்ஸவ பேரங்கள் அநேகம் தத்காலம் எழுந்தருளப் பணணப்பட்டிருககினறன.

கீழ் அஹோபிலததிறகு ஸமீபத்தி லுள்ள ஸந்நிதிகளாவன. (1) பார்க்கவ நருஸிம்ஹன ஸந்நிதி, (2) யோகாநந்தந்ருஸிம்ஹன ஸநநிதி, (3) சதரவட ந்ருஸிமஹன் ஸந்நிதி. மேல ஹோபிலத்திற்கு ஸமீபததிலுள்ள ஸந்நிதிகளாவன: (1) காரஞ்ஜந்ருஸிம்ஹன ஸந்நிதி, (2) ஸ்ரீ அஹோபில ந்ருஸிம்ஹன் ஸந்நிதி, (3) மாலோலன என்ற ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம ஹன ஸந்நிதி, (4) ஸ்ரீ வராஹ ந்ருஸிம்ஹன ஸந்நிதி, (5) ஜ்வாலா ந்ருஸிமஹன ஸந்நிதி, (6) பாவந ந்ருஸிம்ஹன ஸந்நிதி.

இநத திவய ஸநநிதிகளின் பரபாவம புராணஙகளில் கூறப்பட்டுள ளது. பரகாரமும், இபபொழுது இருககிற ப்ரகாரமும இவவிடம காட்டபபடுகிறது.

1. பாாககவ நருஸிமஹன :

கீழ் அஹோபிலததிறகு இரணடு மைல தூரததில மஹா புணயமான பார்க்கவ க்ஷேதரமும், ஒரு நாளும வறறுததும லோகத்தை எலலாம பரிசுத்தம செய்யக கூடியதுமான பார்கவ தீர்ததமும இருககினறன.

அந்த தீர்த்தத்திற்கு ஸமீபத்தி லுளள ஒரு மலேயில் பார்ககவ ந்ருஸிம்ஹன ஸாவாபீஷ்ட பல ப்ரதராக இருநது ஸேவை ஸாதிக்கிருர். இநத மலேயில் அக்ஷய தீர்த்தமெனற ஒரு புணயதீாத்தம இருக்கிறது. இதன் கரையோரங்கள்இனறைக்கும்மிகவும அழகாய் இருக்கின்றன.

"பார்க்கவ க்ஷேத்ரமென்று பெயருடைய ஒரு க்ஷேத்ரம இருக்கினறது. அது ஸவர்ககத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கிற புணயகரமான ஒரு ஸதலம். அங்கேதான மூனறு லோகஙகளேயும் ரக்ஷிக்கிற அக்ஷய தீர்த்தம் இருக்கின்றது. அதன் கரையிலுள்ள பர்வததில பகவான் ஸ்ரீந்ருஸிம ஹன் ஸேவை ஸாதிக்கிருா" என்று இங்குள்ள பகவத் ரூபத்தையும, இந்த புணயக்ஷேததிரத்தையும் விளக்கும் சுலோகங்கள புராணஙகளில் விளஙகுகினறன.

இங்கே நம் ஸ்ரீஅழகியசிங்கரால் நள வருஷததில் திருப்ரதிஷ்டை செய்யப்பட்டது. இங்கேயிருநது 41-வது பட்டம் ஸ்ரீஅழகிய சிஙகரால் தீர்த்தம்கீழஹோபிலத்திற்குககுழாய்கள் மூலம கொணடுவரப் பட்டிருக்கினறது. ஜனங்களின் கஷ்டத்தைப் போககிய இம்மஹானிடததில் நாம என்றைககும் க்ருதஜ்ஞதையுடன கூடியிருக்க வேணடியது நமது கடமையாகும்

2. யோகாநந்த நருஸிமஹன .

கீழ் அஹோபிலததிறகு ஆகநேயத திலை (தெனகிழக்கு) சுமார் ஒணணரை மைல தூரத்தில யோகாநநத நருஸிம்ஹன் ஸந்நிதி இருககின்றது இஙகே பகவான யோகப பட்டையுடன ஸேவை ஸாதிககிருா. இவா பரஹ்லாதாழவானுககு யோகாப்யாசததை பணணி வைதத படியால் 'யோகாநந்த நருஸிமஹன' என்று திருநாமம இவருக்கு ஏற்பட்டது.

மேலும், "வேதாசலம் எனறு சொல்லபபட்ட பாவதத்திறகு மேற்குப் பாகததில் லக்ஷமீ இருககும் இடத்திற்கு சமீபத்தில் தென திசையை நோக்கிக கொணடு பகவானுன யோகாநந்த நருஸிமஹ மஹாத்மாவான ப்ரஹ்லாதனுககு யோகாப்யாஸததை செய்து வைததார். அது முதல லோகங்கள அவரை யோகாநநதா எனறு சொலலுகின்றன. அதறகு வாயு திக்கில பகவானுன ஸ்ரீ நருஸிம்ஹன யோகாநந்த ரூபியாய்க் குகையில் பரகாசிகிருர்" எனறும் புராணத்தில் சொலலப்படுகிறது.

3. சதரவட ந்ருஸிமஹன :

கீழ் அஹோபிலத்திறகு சுமாா ஒணணரை மைல தூரத்தில் சதரவட ந்ருஸிமஹன் ஸந்நிதி இருக்கினறது. இங்கே ஸ்ரீ பகவான இந்திரன் முதலியதேவதைகளால நித்யம்சேவிககப் பட்டவராய்க கொணடு, கிழககே திருமுக மண்டலத்துடன் ஸேவை ஸாதித்துக் கொண்டு, லோகத்தை அநுக்ரஹிககிருர். இந்த திவ்ய மஙகள விக்ரஹத்தின் ஸௌஷ்டவம மறற எட்டு ந்ருஸிம்ஹமூர்த்திகளுககும கிடையாது. சத்ரவட க்ஷேத்ரம், இந்திரன முதலியவர்களால் ஆசரயிக்கப்பட்டிருக்கிறது; இஙகே பகவான் கீழ்ததிசையை அநுகரஹித்துக கொணடு, ந்ருஸிம்ஹரூபியாய் எழுந்தருளியிருக்கிருர்.

மேல் அஹோபிலததிலுளள ஸநநிதிகள்.

1. காரஞ்ச நருஸிம்ஹன :

இநத ஸநநிதி கீழ்அஹோபிலத்திலிருந்து மேல அஹோபிலததிறகுப போகும வழியில பவநாசிநீ எனனும புணய நதிக கரையில, ஒரு நல்ல உதயானவநததின மததியில, மேலஹோபிலததிற்கு ஒணணரை மைல தூரத்திலிருககினறது. இங்கே பகவான சார்ஙகத்தோடும, சககரததோடும வீறறிருக்கும திருககோலத்துடன்

(37-ம் பககம பாாக்க)

# சங்ககால வேங்கடம்

## (வட வேங்கடம்)

ஊக்கததிற்கு மறுபபு :

சென்ற இதழில் வெளியிடப்பட்டுள்ள பேராசியர் அய்யங்கார் அவர்களின் ...கமான முடிவில் சாரம இருப்பதாகத் தோன்றவில்லை சங்கப்பாடல்களை ஆழ்நது கற்போர் விழவினைக் குறிப்பிடும பல பாடல்களைக் காணபர். கிட்டத்தட்ட தமிழகத்திலுள்ள எல்லாச சிற்றூர்களும் விழவு மலிந்திருந்தனவாகவே கூறப் பெற்றுள்ளன. ஆணடுதோறும் வரும் விழாக்கள், பருவந்தோறும் வரும் விழாக்கள், சமூக சமய தொழில் அரசியல் பற்றிய பலவேறு விழாக்கள் ஆணடுதோறும் மாறி மாறி வந்து கொண்டிருப்பதைச் சங்கப்பாடல்களில் கண்டு மகிழலாம்.

"வதுவை விழவிற் புதுவோர்க்
கெல்லாம"

(புறம்–372)

என்ற புறப்பாட்டடியால் திருமண விழாககளும்,

"முந்நீர விழவின நெடியோன"

(புறம்–9)

எனபதனல் கடல தெய்வததிற கெடுக்கப்பட்ட விழாககளும் கூறப் பெறறிருப்பதைக காணலாம் ஆற்றில் வெள்ளம் பெருகிவருங்கால் மக்கள் அதில நீராடிப "புதுப் புனல விழவு' கொண்டாடல் பரிபாடலில் (பரிபா. 6, 7, 10, 11, 12, 16, 20, 22 இவை வையைப்பற்றிய பாடல்கள்) குறிப்பிடப்பெற்றிருபபதைக் காணலாம. புறநானூற்றில் அரசியல அல்லது போர் விழாக்கள் குறிப்பிடப்பெறறுள்ளன.

"போரெதிர்ந தெனனை போாககளம
புகினே
கலலென பேரூர் விழவுடை
யாங்கன"

(புற-84)

(எனனை-தலைவன்: பேரூா-பெரிய ஊர்; விழவு-போர் செய்தற்கெடுத்த விழா).

என்ற அடிகளில் இத்தகைய விழா குறிப்பிடப்பெற்றிருததலைக் காணலாம்.

குறுந்தொகையிலும் விழாவினைப் பற்றிய குறிப்புகள காணக்கிடக்கின்றன.

"விழவு முதலாட்டி" (குறும்-10) என்ற சொற்றொடரைக் காண்க. இது தலைவி இல்லறம் நிகழ்த்த வந்த பின்பே தலைவனுக்குச் செல்வம் உண்டாயிற்று எனபதைத் தெரிவிக்கினறது.

"உடுத்தும் தொடுததும பூண்டுஞ்
செரீஇயும
தழையணிப் பொலிந்த ஆயமொடு
துவனறி
விழவொடு வருதி நீயே ..
... ........................ .. ..
பெருநலக் குறுமகள வநதெனை
இனிவிழ வாயிற் றென்னும் இவ்
வூரே"

(குறுந்-295)

எனற பாடலாலும தலைவி வநத பிறகே விழவு அயர்தற்குரிய செல்வ நிலை தலைவனுக்கு உண்டாயிற்று என பதனைக் காணலாம்.

"காதலர் உழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொள் ஊரின் புகலவனே"

(குறும்-41)

(சாறு-விழா)

இதில் தலைவன் தலைவியுடன இருத்தலால் விழாககொண்ட ஊரினர் மகிழ்வதைப்போல அவள் மகிழ்கின்ருள் எனற குறிப்பினைக் காணலாம்.

"இலங்குவளை நெகிழச் சாஅ யானே
உளனே வாழி தோழி சாரல
தழையணி அல்குல மகளி ருளளும்
விழவுமேம பட்டவென நலனே"

(குறும்-25)

---

பேராசிரியர். டாக்டர் ந. சுப்புரெட்டியார்
**சென்னை.**

---

மேற்கூறிய கருத்து இப்பாடலிலும் வருதல் காணக.

இங்ஙனம் ஊர்கள் ஆண்டுதோறும் விழாக்களுடன் பொலிந்தனவாகக் கூறுதல் சங்கப் பாடல்களின் மரபாகத் திகழ்வதைக் காணலாம். அகநானூற்றில் வரும்,

"அழியா விழவின் அஞ்சு வரு
மூதூர்"

(அகம்-115)

(அழியா விழவு-என்றும் நீங்காத விழா)

என்ற அடியும், புறநானூறறில் வரும்'

"மடியா விழவின யாணர் நன்னாட்டு"
(மடியா=நீங்காத)

எனற அடியும், ஆண்டு முழுவதும் விழா நீங்காத ஊர் குறிப்பிடுதலைக் காணலாம். இந்த விழாப்பற்றிய குறிப்பு,

"வேறுவே றுயர்ந்த முதுவாய்
ஒக்கல

சாறு அயா மூதூா சென்று தொக
காங்கு"
(பட்டின-வரி 214-215)

(சாறு-விழா)

என்று பட்டினபபாலையிலும்,

நிறு அடங்கு தெருவின
சாறு அயா மூதூா
(சிறுபாண்-வரி-201)

என்று சிறுபாணுற்றுப்படையிலும வருகின்றது. சிறறூர்களும் விழா வினுல் பொழிந்தனவாகக குறிபபுகள் உள்ளன.

"விழவு அகலு ளாஙகண சீறூர்"
(புறம்-65)

என்ற புறப்பாடடுக் குறிப்பினையும காண்க. ஒவவோர் இல்லமும் விழ வுடன் பொலிநததாகவும் குறிப்பு உள்ளது.

"மாடந தோறும் மைவிடை வீழ்ப்ப
நீயாஙகுக கொணட விழவினும்
பலவே"
(புறம்-34)

(மைவிடை-செம்மறிக்கிடா)

எனபதனுல் இதனை அறியலாம். இங் ஙனம் இல்லந்தோறும், ஊர்தோறும், நாடு முழுவதும் விழாககள் மலிந் திருநத செய்தியைச சஙகப்பாடல் களில் காணலாம்.

எனவே, விழாபறறிய குறிப்பு வேங்கடத்திற்கு மட்டிலும சிறபபாக அமையவிலலை என்பதனை அறிய வேண்டும். அனறியும் பேராசிரியா அய்யங்கார் அவர்கள காட்டிய பாட வில் (அகம்-61) இவ்விழாக்கள் சமயச சார்புடையவை எனபதற்கு யாதொரு சான்றும இருபபதாகத தெரியவில்லை. ஆகவே, சஙக காலத் தில் சமயததின் அடிப்படையாகவோ வேறு காரணம கருதியோ திருப்பதி புகழடைநதிருநதது என்பதற்கு நம பகமான சானறுகள் இருப்பதாகத தெரியவில்லை.

வேஙகடம—பெயர் விளககம :

சஙககால வேங்கடததைபபற்றி அறிந்துகொள்வதறகு அதாவது வட வேஙகடததைப்பறறித் தெரிந்து கொளவதற்கு 'வேஙகடம்' என்று சொல்லின் பொருள் துணை செய் கினறது. 'வேங்கடம்' என்ற கூட்டுச சொல் (compound word) 'வேம்' 'கடம்' என்ற இரணடு சொறகளா லாயது வேம் + கடம் = வேங்கடம் என்ருயிறறு. 'கடம' என்பது பாலை நிலததைக் குறிககும் சொல்லாகும்.

"பெயன மழை துறநத புலம்புறு
கடத்துக
கவைமுட் கள்ளிக்—காய்விடு கடு
நொடி
துதைமென் தூவித துணைபபுறவு
இரிக்கும் அத்தம்',
(குறுந-174)

(துறந்த - பெய்யாதொழிந்த; புலம்பு உறு-தனிமைமிக்க; கடம்-பாலை நிலம்; காய்விடு-காய் வெடிக கும்பொழுது; கடுநொடி-கடிய ஒலி; துதை-நெருங்கிய; புறவு-புறுக்கள்; இரிக்கும்-நீங்கச் செய்யும்)

என்ற குறுநதொகைப் பாடலில் 'கடம்' என்ற சொல் பாலையைக் குறித்தமை காணக. சிலப்பதிகாரத் திலும்,

"கடமபல கிடந்த காடுடன கழிநது"
(சிலப். காடுகாண-அடி 90)

கடம்-காட்டகத்து நெறி)

என்ற அடியிலுள்ள 'கடம' பாலை நிலத்து வழியினைக் குறிக்கின்றதைக் காண்க. 'கடம்' என்பதற்கு உரை யாசிரியா 'அருஞசுரம' என்று பொருள கூறுவர். பிஙகலந்தை 'கடம' எனபதனை 'மலைச்சாரல்' என்று கூறும.

"புறவணி கொண்ட பூநாறு கடத
திடை"
(நற்-48)

என்ற நற்றிணை அடியில் 'கடம்' என் பது 'புதர்கள் அடர்நத காடு' என்ற பொருளில் வநதுள்ளது. 'வேம்' எனபது 'எரிதல்' என்ற பொருளை யுடையது. எனவே, 'வேங்கடம' என்பது 'கொதிககின்ற நீரறற சுரம் அல்லது மலைச்சாரல்' எனறுபொருள் பட்டுப் பாலை நிலத்தைக குறிக கின்றது. கலித்தொகையிலும்,

"வெவ்விடைச செலன்மாலை ஒழுக
கத்தா ! இவ்விடை
.......... . ........ .... ....
அனனுர் இருவரைக்
காணிரோ பெரும !
காணேம் அலலேம்
கணடனம கடததிடை
ஆண எழில அண்ணலோடு
அருஞசுரம முன்னிய"
(கலி-9)

எனற பாடற்பகுதியிலுள்ள 'கடம' எனற சொல் 'பாலை நிலம்' எனற பொருளிலேயே வருகின்றது. இனி, தமிழ் கூறு நலலுலகத்திற்கு வடக்கே யுள்ள நிலப்பகுதியின் இயல்பினைக காணபோம்.

பேராசிரியர் அய்யஙகார் குறிப்பு :

இநத நிலப்பகுதியின் இயல்பினை இவ்வாறு தம் நூலில் குறிப் பிடுவர். 'கிழக்கு மலைத்தொடர்கள் தமிழகத்தின் வட எல்லையில் கடற கரை ஓரமாகச் சென்று கிருஷ்ணை நதியைத் தாண்டியதும் பல இணைத தொடர்களாகப் பிரிந்து செல்லு கின்றன. அவறறுள் கிருஷ்ணை நதிக் குத் தென்பாலுள்ள தொடர்களில் தென திசையை நோககி சென்னைக்கு 13°வடகுறுககை (North Latitude) நீண்டு செல்லும் மூன்று இணைத் தொடாகள் எடுப்பாகப் புலனு கினறன அவற்றுள் கடறகரைக்கு அணமையிலுள்ள தொடா கிட்டத் தட்ட நேராகச் செலலும ஒரே தொட ராக அமைந்துள்ளது. இரணடாவது தொடர் ஒழுங்கறற முறையில அமைநத குன்றங்களின் தொகுதி யாகும. அவையும் கிருஷணை நதியை ஒட்டித் தொடஙகி காநூலுக்குக கீழ்ப்பகுதியில் சென்று கடப்பை

மாவட்டத்தில் அரை வட்ட வடிவ மான பகுதியில் சிதறிக்கிடக்கின்றன. அவற்றுள் ஒரு பகுதி 'சேஷாசல மலைகள்' என வழங்கப்பெறுகின்றன ஆயினும் மேற்குறிப்பிட்ட மூன்று தொடர்களில், முக்கியமான தொடர் தென் திசையில, மேலும கடற்கரையை நோக்கிச் சென்று சென்னைக்கு வடக்கில் சில மைல்கள தொலைவிலுள்ள பொன்னேரி வரை யிலும பரவியுள்ளது. மேலும ஒழுங கற்ற நிலையிலும தாழ்வான உயரத் திலும உள்ள இன்னொரு தொடர கர்னூடக பீடபூமியின் அடிப்பகுதி யினின்றும தொடங்கி, வட திசை யாகச சென்று அனந்தபுரம, கர்நூல் மாவட்டங்களில் சிதறிய நிலையில் அமைந்துகிடக்கின்றது. இவற்றுள் நடுப்பகுதியில் அமைந்துள்ள மலைக கூட்டங்கள கர்நூல் மாவட்டத்தில 'நல்ல மலைகள்' (நல்கொண்ட) என வழங்குகின்றன. அவை அங்கிருந்து தென் திசையை நோக்கிச் சென்று ஓர் ஒற்றைத்தொடர் வடிவத்தில் திருப்பதி, காளத்தி இவற்றின் அருகி லுள்ள மலைககூட்டங்களைச் சந்திப் பது போல அமைந்துள்ளன. ஆகவே, இந்த மலைகள் சென்னைக்கு அரைப பாகை (Degree) வடக்கில் ஓர் எல்லைப் புறம்போல் அமைந்துள்ளன. பொன்னேரி அருகிலுள்ள கடற்கரை வரையிலும் கீழ்த்திசையை நோக்கி நீண்டு பரவி தமிழகத்தின் எடுப்பான வடபுற எல்லைபோல அமைந்து கிடக் கின்றன''.

மிகப் பழங்காலத்தில இன்று விசாகப்பட்டினத்தருகில் கடல இருப் பதுபோல, கிழக்குப் பக்கத்தில் மலை கட்கு அருகில் அது இருந்தது. இன்று கிழக்குப் பக்கத்தில் கடலுக்கும மலை கட்கும இடையிலுள்ள குறுகலான கடற்கரைப்பகுதி தொலகாப்பிய காலத்திற்கு 2500 அல்லது 3000 ஆண்டுகட்குப் பிறகு புதிதாக உண் டாகியிருத்தல் வேண்டும்; அல்லது இன்றுள்ள கடற்கரைக்குக் கிழக்கி லிருந்த மலைகளைக் கடல் விழுங்கி யிருத்தல வேண்டும். கிழக்குக் கடற கரையிலும் மேற்குக் கடற்கரையிலு முள்ள கடற்கரைக நிலங்கள் கடந்து துச் சென்றது என்பது சிறுகாக்கைப் பாடினியாரின் பாடற் பகுதியால் உறுதியாகின்றது. கடலுக்கும மலைக கும நேரிட்ட போரினைக் கற்பனை நயந்தோன்றக்கூறும் பாடற்பகுதி இது

''வடதிசை மருங்கின் வடுகுவரம பாகத
தென திசை யுள்ளிட டெஞ்சிய
மூன்றும
வரைமருள புணரியொடு பொருது
கிடந்த
நாடடியல வழக்க நான்மையின
கடைக்கண்
யாப்பின திலக்கணம அறைகுவன
முறையே''

இதில் வடதிசைக்கண் ஆந்திர நாடு வரம்பாகக் கூறப்பெற்றிருப்பதைக் காணலாம.

வடக்கில் கிருஷ்ணை நதிக்கும துங்க பத்திரை நதிக்கும் வடபெண்ணை நதிக்கும சற்றுத் தெற்கில குன்று களும் மலைத்தொடர்களும் சூழ்ந்த நிலப்பகுதி தென்னிந்தியாவில் மிக வெப்பமான பகுதியாகத் திகழ்வதை இன்றும்காணலாம். சுற்றுப்புறத்தி லுள்ள கற்பாறைகளிலிருந்து அதி கரிக்கப்பெற்றுப் பரவும் கோடைக் காலக் கதிரவனின வெப்பம 120° லிருந்து 125° F வரையிலும் எட்டு கின்றது. இப்பகுதிகளில கதிரவனின வெப்பத் தாக்குதலால் மரிப்பவா களைப்பற்றியும் நாம் அடிக்கடிக் கேள்விப்படுகின்றோம். கோடைக் காலத்தில் மக்கள் பெரும்பாலும் பகல் நேரத்தில் இல்லத்தைவிட்டு வெளிக்கிளம்புவதில்லை. நம் உடலி லுள்ள ஈரம வெப்பமான காற்றினால் உறிஞ்சப்பெறுவதால் நண்பகலில் வறட்சி மேலிட்டு உடலில் ஒருவித எரிச்சல் தோன்றுவதை உணர் கிறோம். ஆகவே, வறண்ட தன்மை யுடைய இப்பகுதி சங்க நூல்களில் குறிப்பிடப்பெறும் 'வேங்கடம்' என்ற நாட்டுப் பகுதியைப் பெரும் பாலும் ஒத்திருப்பதை அறியலாம். பண்மைக்காலத்தில் ஏற்பட்ட இருப் புப் பாதைகளின் காரணமாக இப் பகுதியுலுள்ள ஒரு சில நகரங்களைத் தவிர, ஏனைய பகுதிகள் யாவும் இன் றும் பிற்போக்குத் தன்மையுடையன வாகவே காண்கிறோம். அண்மைக் காலம் வரையில் இப்பகுதி கிட்ட தட்ட ஆண்டுதோறும் வற்கடத்தா லும் கொள்ளை நோய்களாலும் பீடிக் கப்பெற்றிருந்தது. ஏதோ மழைக் காலத்தில் இப்பகுதியிலுள்ள ஆறு களிலும் ஓடைகளிலும் வெள்ளம் பெருகி வழிந்தாலும் அது சமவெளிப் பகுதியைவிட மிகவும் தாழ்ந்திருப்ப தால் அவை பாசனத்திற்குப் பெரும் பாலும் பயன்படுவதில்லை. ஆயினும், தற்காலத்தில் சிறு சிறு அணைகளை அமைத்து நீர்த்தேக்கத்தை உண் டாக்கும் திட்டங்களால் இப்பகுதி யைச் சார்ந்த பெரும்பாலான இடங் கள் கணிசமான அளவுக்கு மாற்றங் கள் அடைந்து வருகின்றன. நாடு விடுதலை அடைந்த பிறகு இப்பகுதி யில நல்ல முன்னேற்றங்களைக் காண லாம.

(தொடரும)



# திருப்பதி வேங்கடாஜலபதி அஷ்டகம்

(பிரும்மஸ்ரீ சேங்காலிபுரம அனந்தராம தீக்ஷிதா அவர்கள அருளிய திருப்பதி ஸ்ரீவேங்கடாஜலபதி அஷ்டகம்.)

1. வ்ருஷகிரி மந்திர மன்மத ஸுந்தர
ஸங்க ஸுகந்தர கம் ரதனே
நதஜன ஸங்கர பகதவ ஸங்கர
துஷ்ட புரந்தர் துங்கதனே!
ஸரித முநி கநதர தாரித மந்தர
வாரித ஸஙகர வாமதனே
ஜய ஜய வேங்கட ஸைலபதே பவ
ஸங்கட மாஸுநிவாரயமே ||

2. கரத்ருத பஙகஜ லோக ஸிவஙகர
ஸாது ஹ்ருதம்புஜ வாஸரதே
கமலஜபூஜித காந்தி ஸுபூரித
கஞ்ஜ ஸுமாவ்ருத காந்ததனே |
கலிமல தூஷித காலவசீக்ருத
து: நிராஸக வேதபதே
ஜய ஜய வேஙகட ஸைலபதே பவ
ஸங்கட மாஸுநிவாரயமே ||

3. தஸமுக நாஸன தைவத பாலன
பக்த ஜனவன கார்யமதே
கலிமல வாரண கௌஸ்துப பூஷண
கோடி ரவிப்ரப காமநிதே |
ஸுகமுநி ஸம்ஸ்துத வேங்கடநாயக
ஸோக நிவாரக தேவபதே
ஜய ஜய வேங்கட ஸைலபதே பவ
ஸங்கட மாஸுநிவாரயமே ||

4. ஸுக முநி நாரத வந்திந தநதித
தைவத ஸேவித லோகபதே
துரித நிக்ருந்தன துர்மதி கணடந
துஷ்ட நிஷுதந ஸக்தமதே
திநகர ஸநநிப திவ்ய ஸுகுணடல
மணடித ரத்ன க்ரீடஹரே
ஜய ஜய வேங்கட ஸைலபதே பவ
ஸங்கட மாஸு நிவாரயமே ||

5. கடக விபூஷித வேங்கடநாயக
ஸங்கட வாரக லோகபதே
ப்ரதிதின மாகத பக்தஜனாபித
விந்த ஸுபூரித பாணடபதே
கரக மலோஜ்வல பதம ஸுதர்ஸன
ஸங்க கதாயுத மோக்ஷபதே
ஜய ஜய வேங்கட ஸைலபதே பவ
ஸங்கட மாஸு நிவாரயமே ||

6. தஸஸத ராஜத கும்ப முகச்யுத
கந்த ஜலாப்லுத ஸ்ரீததனே
கநக மயாவ்ருத வஸ்த்ர ஸமாவ்ருத
பில்வ தளார்ச்சித ஸௌம்யதனே |
ப்ரணத ஜனவன பாலன தீக்ஷித
ரம்ய ரமாமுக தத் தத்ருஸே
ஜய ஜய வேஙகட ஸைலபதே பவ
ஸங்கட மாஸு நிவாரயமே ||

7. கபில முனிஸ்துத பூஜித ஸஙகர
பூஜந லப்த விவாஹ ஹரே
கலியுக தைவத காமித தாயக
பக்த மனோரத கல்பதரோ |
த்ருசி மதி தாயக பூத ஜத்ரய
புத்ர பலப்ரத தீந நிதே
ஜய ஜய வேங்கட ஸைலபதே பவ
ஸஙகட மாஸு நிவாரயமே ||

8. குபித நவக்ரஹ கோபநிவாரக
கஷ்ட தஸாஹா சிஷ்டபதே
கரிவர ரக்ஷக கோகுல போஷக
காளிய நர்தக க்ருஷ்ணவிபோ |
யது வர பாலக யாத பயாபஹ
யோகி ஹ்ருதாலய யோகபதே
ஜய ஜய வேங்கட ஸைலபதே பவ
ஸங்கட மாஸு நிவாரயமே ||

9. ஜயத மனந்த பதோத்தர ராம
ஸுதீக்ஷித ஸ்த்கருத பத்யமிதம்
ஜகதக மோஸக மானச பலப்ரத
மிஷ்ட ஸுஸிததித மார்த்திஹரம் |
படதி ஸ்ருணோதிச பக்தியுதோயதி
பாகய ஸம்ருததி மதோலபதே
ஜய ஜய வேஙகட ஸைலபதே பவ
ஸங்கட மாஸு நிவாரயமே ||

அனுப்பியவர்

திரு ஆர். சந்திரா ராஜகோபால்
மேட்டுப்பாளையம

# தாடிக்கொம்பு அழகர்



சௌந்தரராசப பெருமாள கோயில

டடுரையன கலைபபையைபபார்த்து வாசகாகள சறறு வியபபடைநதிருகக லாம. தாடிககும கொமபுககும அழ கருககும அபபடி என்ன தொடாபு எனறு. தாடிககொமபுஎனபது ஊரின பெயாதான. அழகா எனபது அவ்வூரில கோயில கொண்டிருககும சௌநதர ராசப பெருமாள ஆவாா.

கோவைககு அருகிலுள்ள பேரூா சிறபஙகளைபபோலவே தாடிககொமபு சிறபஙகள புகழபெறறவை. அக கோயில சிறபஙகளைக காண வேண்டு மெனனும ஆவலினால அவவூருககுப பயணம ஆனேம.

திணடுககலலில இருநது எடடுக கிலோமீடடா வடககே கரூா செல லும சாலையில் உள்ள சிற்றூர்தான தாடிககொம்பு. நெடுந தொலைவு செல் லுமபேருநதுகளிலும, உள்ளூர்ப் பேருநதுகளிலும் பயணம் செய்து இவ்வூரை அடையலாம்.

தாடிககொமபு பேருநது நிற்கு மிடததிலிருநது அழககே பாாததால் கோயிலின கோபுரம நம கண்களில் படுகிறது. கோபுரம் ஐந்து நிலை களையும, ஐந்து கலசங்களையும கொண்டுள்ளது. கோயிலின சுற றுச் சுவா கோட்டை மதில்போல் உள்ளது.

"மணணும நீர் எரிகால மஞ்சுலாவும
ஆகாசமுமாய்
புணணா ஆககை தனனுள புலமபித்
தளாநது எயத்து ஒழிநதேன
விணணுா் நீள சிகர விரையாா திரு
வேஙகடவா
அணணா! வந்தடைந்தேன அடி
யேனை ஆட்கொண்டு அருளே!"

எனனும் திருமங்கையாழ்வாரின பாடலை நமது உதடுகள் முணுமுணுக கக கோபுர வாயிலின் வழியாகக கோயிலை அடைகிறோம

திரு பா அனபரசு,

சேலம.

கோயில கிழககு முகம. மூல வாககு சௌந்தரராசப் பெருமாள் எனறும், தாயாருககுச் சௌநதர வலலித தாயாா எனறும திருப்பெயர் கள். கோபுர வாயிலை அடுத்துக் கரு டன சனனிதி பிறகு மகாமண்டபம். இதை அடுத்து இடைக்கட்டு மண்ட பம. மூலத்தானததில் ஐநதடி உயர முள்ள சௌநதரராசபபெருமாள் திருவுருவமும, நிலமகள (பூதேவி), திருமகள் (ஸ்ரீதேவி) ஆகியோரின்

# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில நின்றவண்ணம் அருள புரியும் வேங்கட வனைக் காண நாட்டின பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனா. அவாகள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகாகளின் எண்ணிக்கை நாளுககு நாள பெருகி வருவதை மனதிற்கொணடு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடில்களின மேல் பொதுமககளின் நன் கொடைத் திட்டததின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாணமை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகா/பக்தர்களுக்குத் தொணடு புரிந்திடும் ஓர் அறிய வாய்ப்பாக இரககமனமிகக பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இததிட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல தளம்

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சஙகுமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகர் ஆகிய காட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின மேல்கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள். 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள அமையும். இவ்வொரு பகுதிககும் வழங்கவேண்டிய நன் கொடைத்தொகை ரூ. 1. 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம மூன்று தளங்களைககொணட மூனறு விருந தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நனகொடையாளா களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ் அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும. இவற்றில் 943 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 1×12'4' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவ அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரணடு தளங்களில் கட்டப்பட் டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 1.20 மீ × 1.20 மீ பரப்ப ளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக கட்டிடத்திற்காக வோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற் கான நனகொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடஙகளுககான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம்/ அறக்கட்டளை போன்ற எந்தப் பெயரிலும வழஙகலாம்.

## சலுகைகள்

நனகொடையாளர் அல்லது அவர் உறவினாகள் அலலது நிறுவனததின அல்லது அறககட்டளை யைச் சார்ந்த உறுப்பினாகளோ அல்லது அவற்றின அலுவலாகளோ வருடததில் 60 நாட்களுககு, (ஒரு முறை தஙகிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நனகொடை அளிதத தஙகு வசதி களில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழஙகாத தஙகு வசதிகளில் தங்க நேரிடின, வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருந்து வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒனறு முதல தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு:

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517507. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

தரும் பொருள சிறியதே : பெறும் அருள பெரிதே:

(12-ம் பக்கத் தொடாசசி)

ஸேவை ஸாதிக்கிருர். இதைக் குறித்து ஒரு புராணக்கதை சொல வதுணடு

முனனொரு காலத்தில், கோபிலர் என்னும் முனிவர் துர்வாஸ மஹரிஷி யால சபிக்கப்பட்டார். அந்த சாபத் தின பலமாக கோபிலர் தன ஜ்ஞா னத்தை இழநதார். பிறகு கோபில மஹரிஷி இநத க்ஷேதரத்தில் மந்த ராஜன எனறு சொல்லபபடட ஸ்ரீ நருஸிம்ஹ மஹா மந்த்ரத்தை ஜபித் தார். பகவான ஸ்ரீலக்ஷ்மீ நருஸிம் ஹன்ப்ரஸன்னராகி 'ஓ கோபில மஹ ரிஷியே! உம்மிடம மிகவும் சந்தோ ஷம் அடைநதேன. உமக்கு க்ஷேமம் உணடாககடவது. உமககு சாஸதர ஜ்ஞாநத்தை அளித்தேன். நல்ல புததி மானுக ஆகி, கடைசியில வைராக்யம் பெறறுஎன்னிடததிறகேவரககடவீர்' என்று ஸாதித்தார். இவ்விடத்தில் மந்த்ர ராஜனை ஜபிககிறவர்களுககு இஷடபூர்த்தி ஏற்படுவது ஸித்தம். பவநாசிநிக கரையில் எந்த சரஞ்சவ்ரு க்ஷத்தின் அடியில பகவான் சார்ங்கத தோடும சக்கரத்தோடும் ஸேவை ஸாதிககிருரோ அந்த இடத்திற்கு காரஞ்ச க்ஷேத்ரம என்று பெயா. எவர்களுககு ஸநாநததில் இஷ்டமோ எவாகளுககு ஜஞாநததில விருப பமோ அவரவாகளுககு வேணடிய பலத்தை நருஸிம்ஹ ரூபியாகிய பக வான் அளிக்கிருன என்று புராணம கூறுகிறது.

இநத ஸநநிதியின் பககததில் சிறிய திருவடி அதிக கமபீரமான திவய மஙகள விகரஹத்துடன ஸேவை ஸாதிககிருா.

இவவிடமிருநது மேல அஹோபி லத்திற்குச் செலலுமு மாாக்கததில் இந்த அஹோபிலமட திவய ஆஸ் தானத்தை ஏற்படுத்துவதறகு ஸ்ரீ லக்ஷ்மீ நருஸிமஹன் நியமனப்படி எழுநதருளி ஸ்ரீமத்ஆதிவணசடகோப யதீந்த்ர மஹாதேசிகன் முதன்முதல் தன் அநுஷ்டானங்களை செய்தருளிய திவ்ய ஸ்தலம இருககின்றது. இங்கே பவநாசிநி மேலிருநது கீழே செஙகுத் தாக விழுகிறது. இதற்கு பைரவ குணடம் என்று பெயர்.

இதற்கு மேல் சென்ருல், மேல் அஹோபிலத்திற்கு அதிஸமீபத்தில ஒரு நலல மணடபம் இருக்கினறது. இஙகேதான் ஸ்ரீமதாதி வண்சடகோப யதீந்த்ர மஹாதேசிகனே, ஸ்ரீ நருமஸி ஹன நியமனப்படி கோயில் அதிகாரி கள எதிர் 'காணடு அழைத்ததாகச் சொல்லுகிருர்கள். மேல் அஹோ பிலததெமபெருமானுககும சஞ்சு பிராட்டிககும பரஹமோத்ஸவம் நடக்கும் ஸமயததில், பெருமாளும, தாயாரும நித்யபபடி இங்கே எழுந் தருளி உத்ஸவம கணடருளுகிருாகள்.

ஸ்ரீ அஹோபில நருஸிமஹன் :

இநத திவய தேசத்திறகு சக்ர வர்த்தித் திருமகன எழுந்தருளின தாயும், ஸ்ரீ லக்ஷ்மீ நருஸிம்ஹனை பஞ்சாம்ருதம என்று சொல்லப்பட்ட ஐந்து ச்லோகங்களிஞல் மங்களா சாஸநம் செய்ததாயும ஹரிவம்சத் தில அநநதர்கதமான சேஷ தாமத் தில் 47-வது அத்யாயததில் சொல்லி யிருக்கிறது இநக ஐந்து ச்லோகங் களையும அநுஸந்தானம் பணணிய தின பயனுக ஸ்ரீ சகரவர்த்திக திரு மகன பிராட்டி இருக்கும இடந தெரிந்து அவளை மறுபடியுமடைநத மாதிரியாக இந்த ச்லோகங்களை தினந்தோறும பகதியுடன அநுஸந தானம பண்ணுபவர்களுககு மனேரத ஸிததியும ஸவாககமும ஏறபடு மெனறு 40-ம் பட்டம ஸ்ரீ அழகிய சிஙகா ஸாதிப்பதுணடு.

இநத திவ்ய ஸநநிதி இருக்குமிடத் தையே மேல் அஹோபிலம் எனறு சொல்லுகிறது. இங்குளள பவநாசிநி யின குணடததை 'கஜ தீரத்தம்' எனறு புராணஙகள் கூறுகினறன. இஙகே அநேக மணடபஙகள இருக் கினறன. இஙகே ஸ்ரீ நருஸிம்ஹ பக வான் ஒரு குகையில் ஆச்சர்யமாயும் அற்புதமாயும் ஸேவை ஸாதிக்கிருர். சக்ராகாரமாய், மேலே மலை நீரின்கீழ் ஓர் மேடையில் தசபுஜனுய், ஹிரண்ய கசிபுவின் ஸமஹார திருக்கோலத் துடன் பகவான் ஸேவை ஸாதிக்கிருர். இந்த மூர்த்தியே ஒன்பது நருஸிம்ஹ மூர்த்திகளுக்குள் ப்ரதான மூர்த்தி. இந்த திவயமஙகள விக்ரஹத்தின் பெருமை புராணங்களில் நன்ருய் வரையப்பட்டிருக்கிறது.

எல்லா ஸ்தலங்களிலும், கஜ தீர்ததத்தின் கரை மிக்க சுலப மானது. அவ்விடத்தில் சத்ருக்களைப் பிளநது கொண்டே, நருஸிம்ஹன் ப்ரகாசிககிருர். சக்ராஸநத்தில் உமன்று கிடப்பவருடைய வக்ரமான மநஸ்ஸை நாசஞ் செய்து கொண்டே, ஸடைகளுடைய கூட்டத்தோடு கூடிய வராய், அஸுரஸமூஹத்தைக் கொன்று கொண்டு, கோரைப்பற் களிஞல் பயங்கரமான திருமுகத் தோடு கூடினவராய், பயத்தையும் பயப்படுத்துகின்றவராய், கூரிய வஜ்ராயுதம் போல் கடினமான நகங் களிஞலே அஸுராகளைக் கலக்கியவ ராய் நெற்றிக் கண்ணில் உணடான கொடிய நெருப்பினல் அளவிட முடி யாதஆங்காரத்தோடு மூன்றுலோகங் களையும எரிப்பவர் போலும், பக்தர் களிடத்தில க்ருபையினல் எப்பொழு தும் பாலிக்கப்பட்ட அமருதம் போன்ற பார்வையுடன கூடினவ ராய், எதிரில் கைகூபபி நிற்கின்ற ப்ரீதியினல் பூரிக்கப்பட்ட ஸத்பக்தனு கிய ப்ரஹ்லாதனை கருணையுடன் அநுக்ரஹித்துக் கொணடு மிகவும் ஸநதோஷததுடன், ஸ்ரீ நருஸிம்ஹன் எழுந்தருளியிருக்கிருா. நூற்றுக் கணக்காகவும, ஆயிரக்கணக்காகவும் வேறு எததனையோ ஸ்தலங்கள் இருக் கினறன ஆனல் இந்த ஸதலமே ப்ர ஹ்மாதிகளாலே உபாஸிக்கப்பட்ட முதன்மையான ஸ்தலம்.

இநந திவயமஙகள விக்ரஹத்தின் உதஸவரூபததின் அழகு வேறு ஒரு திவயமஙகள விகரஹததிற்கும் கிடை

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேஙகடேச சுபரபாதம (ஸ்தோதரம, ப்ரபததி, மஙகளா சாஸனங்களுடன) | 0—50 |
| 2. | ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன | 0—75 |
| 3 | அன்னமயயா ஓர் அறிமுகம் டாக்டா. பொன். சௌரிராஜன டாகடா. கே. சர்வோததமன | 1—00 |
| 4. | பகவத சநதேசம் (தமிழாக்கம்) டாகடர். பொன் சௌரிராஜன | 0—50 |
| 5 | இநது சமயக் கையேடு (தமிழாககம) அ நடராஜன் | 1—50 |
| 6. | நிதயாநுஸநதானம (வடகலே) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8 | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கணணன பேசுகிறான —நஜன | 0—50 |
| 10 | சுவாமி பட்டினத்தாா டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸவரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம —சி. கே. பாஸ்கரராவ | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாகடா. கே. சி. வரதாசாரியாா —டாகடர். டி. தாதாசாரியாா | 15—00 |
| 4 | கரியாதிகாரா — தொகுத்தவர் : டாகடர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்ககணடேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸனேபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸவர சுப்ரபாதம | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டா. டி. அர்ககசோமயாஜி | 50—00 |
| 9. | ததவ சாஙக்யானம —திரு. ஆா. ராமமூர்ததி சர்மா | 2—00 |
| 10. | பிரமமசூதர பாஷயம-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூாத்தி சாமா | 30—00 |

மேறபடி நூலகளுககான தொகையை வஙகி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம. வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலேவா(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும முகவரியுடன ஆங்கிலத்தில தொடாபு கொள்ளவும்.

யாது. ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் 'அஷ்டபுஜாஷ்டகம்' என்று தான் ஸாதித்தருளிய ஸ்தோத்ரத்தில, எட்டுத் திருககைகளுடன் கூடிய பகவானே வர்ணித்துள்ளாா. இநத திவயமங கள விகரஹத்திறகோ பத்து திருககைகள் பிம்பததின திருவடித தாமரைகளிலே ப்ரஹ்லாதன் கூப பின திருக்கைகளுடன ஸேவை ஸாதிககிறான். ஹிரணயகசிபுவை, பகவான தன திருமடியின்மேல போட்டுக கொணடு, ஒரு திருககையினுல் அவன சிரஸை அமாததிக கொணடும, இரணடாவது திருக்கையினுல் அவன் கால்களே அமர்த்திக் கொணடும, மூனறுவது திருககையினுலும் நானகாவது திருககையினுலும அவனது குடலேப்பிளநது கொணடும, ஐநதாவது ஆறுவது திருககைகளினுல் அவனது ரத்தத்தை, பானம் (இநத அவஸரம் நன்ருய் திவயமங கள விகரஹததில் காட்டப்பட்டிருக்கினறது. ஹிரணயகசிபுவின குடலுககும், பகவான திருப்பவழத்திற்கும் இரணடு கம்பிகள் கொடுத்திருககின்றன. ரத்தம வழிகின்றதை காட்டியிருப்பதையும கணணுர ஸேவிக்கலாம்) செய்துகொணடும், ஏழாவது எட்டாவது திருக்கைகளினுல் திருவாழி திரிசசஙகுகளேத் தரிததுக கொணடும், ஒனபதாவது பததாவது திருக்கைகளினுல -ஆசரித ஸமரக்ஷணாததமாயும், விரோதி நிரஸநாாத்தமாயுமுளள ஸ்ரீ வைஷணவ திவ்யாயுதங்களேயும தரிததுக கொணடும், வீறறிருநத திருககோலததுடன ஸேவை ஸாதிககிறாா

இநத திவயதேசதது எமபெருமானே, ஸாவஜ்ஞனிடத்தில ஸர்வாாததம கரஹணம பணணின திருமங்கை மனனன, 'தெய்வமல்லாற் செலல வொண்ணுச் சிங்கவேள் குன்றமே' என்றும, 'சென்று காணாற்கரிய கோயில சிஙகவேள் குனறமே' என்றும், 'நாத்தழும்ப நானமுகனுமீசனுமாய முறையாா லேத்த' என்றும் 'நம்முடை நம்பெருமான்' என்

றும்' 'எங்களீசனெம்பிரான்' என்றும மங்களாசாஸநம் செய்து தனக்கு இந்த திவ்ய தேசத்திலும, அவ்விடத்தில் ஆசரித ஸம்ரக்ஷணார்த்தம கோயில கொண்டு எழுந்தருளியிருக்கும ஸ்ரீ நருஸிம்ஹ பகவானிடத்திலும் உள்ள அபிநிவேசத்தை காட்டியருளினார்

ஸ்வாமி ஸ்ரீ தேசிகன இவ்விடத்திற்கு உத்தர தேசயாத்ரை செய்த ஸமயத்தில எழுந்தருளி மங்களாசாஸநம செய்தருளியதாக குரு பரம்பரைகளில ப்ரஸித்தம. ஸ்வாமி காலம கி. பி. 1168-1369.

சைதன்ய தேவரென்ற கௌரங்கர் இந்த க்ஷேத்திரத்திற்கு 1513-ம் வருஷத்தில் விஜயம செய்ததாயும், பகவத ஸேவையும் ஸ்ரீ அழகியசிங்கர் ஸேவையும் கிட்டினவுடன மிகவும பரவசமாகப் போய்விட்டதாயும் சொல்லுகிறார்கள். இவர் காலம் கி. பி. 1485-1533.

அந்த ஸமயத்தில ஸ்ரீ அஹோபில மட திவ்யாஸ்தானத்தில் ஏழாவது பட்டத்தில மூர்த்தாபிஷிக்தராய எழுந்தருளியிருந்த சதலேகினீலேக நானா குணகவி தார்கிக கவி தார்க்கிக கண்டீரவ ஸ்ரீ வணசடகோபயதீந்தர மஹாதேசிகன ஆஸ்தானம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார். இவ்வழகிய சிங்கரின ஆஸ்தாந நிர்வாஹ காலம கி பி. 1512-1521.

இந்த அஹோபிலமட திவ்ய ஆஸ்தானத்தில 34-வது பட்டத்தில மூர்த்தாபிஷிக்தராய எழுந்தருளியிருந்த ஸ்ரீவணசடகோப ராமானுஜயதீந்தர மஹாதேசிகனும் இந்த ஸ்ரீசடகோப திவ்யமங்கள விக்ரஹத்தின ஸௌஷ்டவத்தை பின்வரும பாசுரத்தால் அநுபவித்தருளியுள்ளார்.

'கொள்ளி யெழுகோளமுண்ண
குடலறப பாயநதிட்டு
தள்ளிய வனதலை காலைத
தனித்தனியே பிரித்திட்டு
அளளியவ னுதிரத்தை
யாசை யுடனுண்டபிரான.'

இந்த திவ்ய ஸந்நிதியின் ஸமீபத்தில் ஒரு சிறிய ஸந்நிதி இருக்கின்றது. ருத்ரனுக்கு பகவான வரமளித்த இடம இது என்று சொல்லுகிறார்கள். இங்கே லிங்கமும், உக்ர நருஸிம்ஹனும இருக்கிறார்கள்.

இங்கே ஒரு குகை மூடப்பட்டிருக்கின்றது. இதன வழியாகத்தான இந்த அஹோபில மஹாமட திவ்யாஸ்தானத்தில் ஆறுவது பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீவணசடகோப ஸ்ரீஷஷ்டபராங்குச யதீந்தர மஹாதேசிகன, ஸ்ரீ நருஸிமஹனுடன ஐக்யமானார் என்பது ஸுப்ரஸித்தம். அது முதல அந்த குகை மூடப்பட்டிருக்கின்றது. இந்த மஹானின ஆஸ்தாந நிர்வாஹ காலம கி. பி. 1498-1512. இந்த திவ்ய தேசத்து எம்பெருமானுக்கும் ஸ்ரீ அழகிய சிங்கரால் நள வருஷத்தில் ஸம்ப்ரோக்ஷணம நன்றாய் நடத்தப்பட்டு அநேக திருப்பணிகளும், அர்ச்சகர்கள நிர்ப்பயமாக வஸிப்பதற்காக இடமும் செய்யப்பட்டன. இது ஒரு பெரிய ஸந்நிதியாயும், மண்டபங்களினால்நிறைந்ததாயும் இருக்கின்றது அவ்விடத்திற்கு தீர்த்தமபவநாசிநியிலிருந்து தானாகவே வருவதற்காகக் கலலில குழாய்கள செய்திருப்பதை இன்றைக்கும் பார்க்கலாம். பவநாசிநிக் கரை ஓரமாக மேலே சென்றால் அங்கே ஆச்சர்யமான நூற்றுக்கால மண்டபம ஒன்று நிர்மாணம் செய்யப்பட்டுள்ளது. மனுஷ்யன மிகவும ப்ரயாஸையுடன செல்ல வேண்டிய இடத்தில, இந்த மஹா மண்டபத்திற்கு வேண்டிய கற்கள் எப்படி வந்தனவோ! அந்தக் கற்கள் அம்மலையிலுள்ளவைகளில்லை என்பது நிச்சயம்.

3. க்ரோடாகார (வராஹ) நருஸிம்ஹன :

மேல அஹோபிலத்திலிருந்து ஸ்ரீ லக்ஷ்மி நருஸிம்ஹன் ஸந்நிதிக்கு போகும் மத்ய மார்க்கத்தில் பவநாசிநிக் கரையின்மீது இந்த ஸந்நிதி இருக்கின்றது. இங்கே வராஹ ரூபியாய் பகவான் சேவை ஸாதிப்பதுடன் பக்கத்தில் ஸ்ரீலக்ஷ்மி நருஸிம்ஹனும் ஸேவை ஸாதிக்கிறார்.

இது க்ஷேத்ரங்களில் உத்தமமானது. இத்திவ்ய க்ஷேத்ரத்தின மஹிமையை, "அநாதியாகிய பகவான வேதாசலத்தின் பின் புறத்திலிருந்து கொண்டு, வராஹ ரூபத்தை யடைந்து, பதநியாகிய பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கிறார்; மதுஸூதனனாகிய பகவான் இங்கே வராஹ ரூபியாய் எழுந்தருளியிருக்கிறார். இந்த க்ஷேத்ரம், க்ஷேத்ரங்களுக்குள் உத்தமோத்தமமான வராஹ க்ஷேத்ரமென்று சொல்லப்படும்" என்று புராண ச்லோகங்கள் வர்ணிக்கின்றன.

4. மாலோல (ஸ்ரீ லக்ஷ்மி) நருஸிம்ஹன

க்ரோடாகார நருஸிம்ஹன் ஸந்நிதியிலிருந்து மேலே ஒரு மைல் தூரத்தில் இந்த ஸந்நிதி இருக்கின்றது. வேதாத்ரியின சிகரத்திற்கு லக்ஷ்மீ க்ஷேத்ரம் என்று பெயர். இவ்விடத்தில் பகவானாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணு நருஸிம்ஹ ரூபியாய் லக்ஷ்மியோடு கூட நித்யவாஸம் செய்கிறார். இந்த ஸந்நிதி கொஞ்சம பெரிய ஸந்நிதி. முன மண்டபம. அர்த்த மண்டபம, மணி மண்டபம், கர்பக்ருஹம் இவைகளுடன கூடியது. முனனாலே ஒரு கருடஸ்தம்பமும், பின்னாலே ஒரு நல்ல புஷ்கரிணியும் இருக்கின்றன. ப்ரதக்ஷிணம செய்ய இடம இருக்கின்றது. இங்கே பகவான தெற்கு முகமாக ஸேவை ஸாதிக்கிறார். இந்த இடத்தில் 'கனகா' என்ற பெயருடன ஒரு நதி ப்ரவஹிக்கிறது. தன்னுடைய பெருக்கினால பகவானுக்கு இந்த நதி ஸந்தோஷத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றது. இங்கே பகவான நருஸிம்ஹன முன்பு மஹாலக்ஷ்மிக்கு ப்ரத்யக்ஷமாகி தானமிட்டு ஏறபடுத்தினார். அது முதல் இதை ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் வாஸஸ்தலமாக சொன்னார்கள்.

வேதாத்ரியில் அழகிய சிகரத்திற்கு லக்ஷ்மிக்ஷேத்ரம் என்று திருநாமம். அவ்விடத்தில் ந்ருஸிம்ஹ ரூபியாகிய பகவான் ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் நித்தியவாஸம் செய்கிறார். எந்த மனுஷ்யர்கள் லக்ஷ்மி தேவியினிடத்தில் பக்தியுள்ளவர்களாய், இம்மையில் ஸம்பத்தையாவது, இந்த்ர பதவியையாவது விரும்பி அஷ்டாக்ஷரத்துடன் கூடிய ஸ்ரீ லக்ஷ்மி ந்ருஸிம்ஹனுடைய மந்திரத்தை ஹோமம் செய்ததின் மிகுதியான அந்நத்தை புஜித்துக்கொண்டு, ஆறு மாத காலம் ஜபிக்கிறார்களோ, அவர்கள் ஏராளமான ஸம்பத்தையும் அல்லது விரும்பினவற்றையும் அடைகிறார்கள் என்றும் இந்த திவ்ய க்ஷேத்ரத்தின் ப்ரபாவம் புராணங்களில், வர்ணிக்கப்படுகின்றன.

இந்த திவ்யமங்கள விக்ரஹத்தின் உத்ஸவ மூர்த்திதான் ஸ்ரீ மதாதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகனுக்கு ப்ரத்யக்ஷமாய், அம்மஹான் காலம் துடங்கி நாளது வரை ஸ்ரீ அஹோபில மஹாமடத்தில் ஆச்ரிதர்களை ரக்ஷித்துக் கொண்டு ஸேவை ஸாதித்துவருவது. இந்த மூல பேரத்திற்கு முன்புள்ள பீடம்தான் இந்த உத்ஸவ பேரத்தால் முன் அலங்கரிக்கப்பட்டிருந்த இடம். சென்ற நள வருஷம் நடந்த திருப்ரதிஷ்டைக்குப் பின் இதே பீடத்தில்தான் உத்ஸவ பேரத்தையும் எழுந்தருளப் பண்ணி, மூல பேரத்திற்கும், உத்ஸவ பேரத்திற்கும் சேர்த்து ஸ்ரீ அழகியசிங்கர் விசேஷ ஆராதனம், திருமஞ்ஜனம் முதலியவைகள் செய்து வைத்தார் நம் ஸ்ரீ அழகியசிங்கர். இப்படிச் செய்தற்கு முன் இதே மாதிரியாய் ஸ்ரீ அஹோபில மஹா மடத்தில் 28-வது பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்தவரும் ஸ்ரீ வைஷ்ணவ ஸமூஹத்தால் அபரபாஷ்யகாரரென்று உத்கோஷிக்கப்பட்டவருமான ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ ரங்கநாத சடகோபயதீந்த்ர மஹா தேசிகன் காலத்தில் இன்றைக்குச் சுமார் ஒரு நூற்றுண்டிற்கு முன் இப்படிப்பட்ட வைபவம் நடந்ததாகச் சொல்லுகிறார்கள். இந்த மஹானின் ஆஸ்தான நிர்வாஹ காலம் கி. பி. 1833-1838. இப்புண்ய புருஷன் ஸ்ரீ அஹோபிலத்திற்கு எழுந்தருளினதாக குரு பரம்பரைகளிலிருந்து தெரிய வருகிறது. அப்புறம் பன்னிரண்டு பட்டங்கள் கழித்து சுமார் எண்பது வருஷங்கள் ஆனபிறகு 40-வது பட்டம் ஸ்ரீ அழகியசிங்கர் எழுந்தருளி இந்த சேராத சோதியை சேர்த்து வைத்து எம்பெருமானை யுகப்பித்தார்.

42-43-வது பட்டம் ஸ்ரீ அழகிய சிங்கர்கள் இம்மாதிரியே மூல பேரத்துடன் சேர்த்து வைத்து உகப்பித்துள்ளார்கள்.

## 5. ஜ்வாலாநருஸிம்ஹன் :

இந்த ஸந்நிதி மேல் அஹோபிலத்திற்கு மூன்று மைல் தூரத்தில் உயரே இருக்கின்றது. கருடாசல, வேதாசல மத்தியில அசலச்சாயமேரு என்ற பர்வதம் இருக்கின்றது. அதன் மத்தியில் இந்த திவ்ய க்ஷேத்ரம் இருக்கின்றது. கோடி ஸூர்யன் ப்ரகாசிப்பது போல இங்கே பகவான் தேதீப்யமான காந்தியுடன் ஸேவை ஸாதிக்கிறார். இந்த க்ஷேத்ரத்தின் வைபவம் புராணத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

"இந்த ஜ்வாலா க்ஷேத்ரம் என்னும் முக்தி க்ஷேத்ரம், பிசாசு முதலிய கெட்டவைகளைப் போக்கத்தக்கது என்றும் அங்கே கடினமான வ்ரதத்தோடு கூடிய அநேக ரிஷிகள் ஸாவதானர்களாய் வஸித்து வருகிறார்கள் என்றும் ஆயிரம் ஸூர்யர்கள் உதித்தாற்போன்ற தேஜஸ்ஸையுடையவராயும், வஜ்ராயுதம் போல் இருக்கிறவராயும், தன்னுடைய கண்களின் நெருப்பை கக்குகின்றவராயும், மின்னலின் ஸமூஹத்திற்கு ஸமானமான ஸடைகளினால் பயங்கரமாயும், திவ்யமாயும், கூர்மையாயும் உள்ள நகங்களினால், ப்ரகாசிக்கின்ற அநேகம் பாஹுதண்டங்களினால் ஜ்வலித்துக் கொண்டிருக்கின்ற திருமேனியையுடையவராயும், பிளக்கப்பட்ட ஹிரண்யனுடைய தேகத்தை அணிந்தவராயுமுள்ள பெரிய ரூபத்தையுடைய ஸ்ரீ நருஸிம்ஹனை பஜிக்கிறோம்" என்று இந்த க்ஷேத்ரத்தின் வைபவத்தை புராண ச்லோகங்கள் உத்கோஷிக்கின்றன.

## 6. பாவந நருஸிம்ஹன் :

இந்த ஸந்நிதியும் மேல் அஹோபிலத்திற்கு சுமார் நான்கு மைல் தூரத்திலிருக்கின்றது. இந்த ஸந்நிதி கருடாசலத்திற்கு தெற்கில் பாவந தீர்த்தக் கரையில் இருக்கின்றது. இவர் ஆச்ரிதர்களுக்கு அபீஷ்டத்தை கொடுப்பவர். தன்னை அடைந்த ஜந்துக்களுக்கெல்லாம் வேண்டியதைக் கொடுத்து காப்பாற்றுகிறார். இன்றைக்கும் இவ்விடத்தில் ப்ரார்த்தனைகள் அதிகமாக நடந்து வருகின்றன. அங்கு பகவானாகிய விஷ்ணு ந்ருஸிம்ஹ ரூபத்தை தரித்துக்கொண்டு ஸேவை ஸாதிக்கிறார்.

## உக்ரஸ்தம்பம் :

இந்த திவ்ய க்ஷேத்ரங்கள் தவிர வேறு ஆச்சர்யமான விஷயம் ஒன்று மேல அஹோபிலத்திற்கு சுமார் ஐந்து மைல் தூரத்தில் பார்க்கத்தக்கது. அதற்கு உக்ர ஸ்தம்பம் என்று பெயர்.

ஒரு மலை இரண்டாக வெடித்தது போல் உன்னதமாகத் தெரிகின்றது. இதன் மத்தியில அவதார வேஷத்தோடு ஸ்ரீ நருஸிம்ஹன் எழுந்தருளி ஸேவை ஸாதிக்கிறார். ஹிரண்யகசிபுவின் கருஹஸ்தம்பம் என்று சொல்லுகிறார்கள். இவ்விடத்தில சங்கு, சக்ரம், திருமண் மூன்றும் பாறையில நன்றாய் செதுக்கப்பட்டிருக்கின்றன. இதைச் சுற்றி வருவது மிகவும் ச்ரமமான கார்யம். செங்குத்தான மலைகளின் மத்தியில இந்த உக்ரஸ்தம்பம் இருக்கின்றது.

## ப்ரஹ்லாதபடி :

ஸ்ரீலக்ஷ்மி நருஸிம்ஹன் ஸந்நிதிக்கு மேல உக்ரஸ்தம்பத்திற்குக் கீழே, இரண்டிற்கும் மத்தியில ப்ரஹ்லாத நருஸிம்ஹன் ஸந்நிதி இருக்கின்றது ஒரு சிறு குகைக்குள் ப்ரஹ்லாதன் ஸேவை ஸாதிக்கிறார். இந்த ஸந்நிதிக்கு முன், சிலாசாஸனம் ஒன்று இருக்கின்றது அது இன்னது என்று கண்டுபிடிக்க முடியாதபடி இருக்கின்றது. ★

(௪௩ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்விதமாக சகல தத்துவங்களையும் தனக்கு ஆபரணமாகவும் ஆயுதங்களாகவும் அணிந்துகொண்டு "ஹஸ்தகிரி" என்று சொல்லப்படும் காஞ்சீபுரியில் உள்ள குன்றின் மேல் நின்று சகல உலகங்களையும் காத்தருள்கின்ருன் என்கிருர் ஸ்வாமி வேதாந்த தேசிகர். (உரை வங்கீபுரம் ஸ்வாமி, ஒப்பிலியப்பன கோவில்)

## ஆத்மாவின தனமை

ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தின் படி இருபத்தைந்தாவது தத்துவமாக ஆத்மாவைக் குறிக்கும் 25-வது எழுத்துமான மகாரமானது (அதாவது ஆத்மாவானது) ஸ்வதந்திரன் அன்று, எனறும் பகவானுக்கு தாஸ பூதனுகும். அதாவது பகவானுக்கு அடிமைப்பட்டது என்று பொருளாகும். இதைப் போலவே இப்பிரகிருதியும் பகவானுக்கு அடிமையாகும். எனவே ஆத்ம வாசகமான மகாரத்தை ஆத்மாவின்பெயராக சமஷ்டி (பன்மை)பெயராக கொள்ளவேணும் என்கிருர் உலகாசார்யர். முமுக்ஷுப்படி திருமந்திரப்ரகரணம் சூத்திரம் 67ல் இதுதான சமஷ்டி வாசகம் என்றும், சூத்திரம் 68ல் ஜாத்யேக வசனம் எனறும் உலகாசார்யர் கூறியுள்ளார். அதாவது எம்பெருமானுக்குரியது என்ற தன்மையிலும் பிரகிருதி தத்துவத்திற்கு அப்பாற்பட்ட இருபத்தைந்தாம் தத்துவம் "ஆத்மா" எனபதிலும், ஞானமயமானது என்பதிலும், ஞானத்தை குணமாகக் கொணடிருக்கும் சொரூபத்திலும் சகல ஆத்மாக்களும் ஒரே சொரூப சுபாவங்களோடு விளங்குவதை ப்ரணவத்தின்கடைசி பதமான மகாரமானது, ஆத்ம கோடிகளின் சமூகத்திற்கே பெயராக உள்ளதாகக் கொள்ளவேணும் என்கிருர் பிள்ளை லோகாசார்யர்.

இந்த மகாரத்தை சமஷ்டி வசனமாக (பன்மையாக) கொள்ளுவதற்கு ஓர் உதாரணத்தின் மூலம் விளக்கலாம். ஒரு தான்ய வியாபாரி ஒரு அறையில்நெல், ஒரு அறையில் கம்பு, ஒரு அறையில் சோளம் என்று மூட்டையாகவோ, குவியலாகவோ, வைத்துள்ளான். வியாபாரியிடம் அறையில் என்ன இருக்கிறது என்று கேட்டால்அந்தவியாபாரி இந்த அறையில் நெல், அதில் கம்பு, மற்ற அறையில் சோளம் உள்ளது என்று ஒருமையில் தான்பதில் கூறுகிருன். வியாபாரி அப்படிக் கூறும்போது அறைகளில் ஒரே ஒருமணிநெல்,ஒரேஒருகம்பு, ஒரேஒரு சோளம் உள்ளதாக நாம் கருதாமல் பன்மையில் நெல், கம்பு, சோளம் ஆகியவை அறையில் மூட்டையாகவோ குவியலாகவோ உள்ளதாக பன்மையாக எடுத்துக் கொள்வது போல்தான் மகாரமானது ஆத்ம கோடிகளின் சமஷ்டி வசனம்(பன்மையாக) ஆகிறது எனலாம்.



ஸ்ரீ உச்சிமல்லிகுடி-பீஜாபூர்-கர்னடகம்.

## மகாரமும பிராட்டி சம்பந்தமும் :

மகாரத்திலும் பிராட்டி சம்பந்தம் உண்டு. எப்படியெனில் ப்ரணவத்தின் முதல் எழுத்தான அகாரத்தில் பிராட்டி சம்பந்தம் மறைமுகமாகக் கிடைக்கிறது என்பர். அகாரத்தில் பிராட்டி சம்பந்தம்இருப்பது போலவே ஆத்மாவைக் குறிக்கும் சொல்லான 25ம் எழுத்துமான மகாரத்திலும் பிராட்டி சம்பந்தம் உண்டு என்கிருர் லோகாசார்யர். இவர் முமுக்ஷுப்படி திருமந்திர ப்ரகரணம் சூத்திரம் 42ல் 'பர்த்தாவினுடைய படுக்கையும் பிரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப் போல ப்ரதம சரம பதங்களை விடாதேயிருக்கும் இருப்பு" என்று அருளிச் செய்துள்ளார். அதாவது பிராட்டி தன்னுடைய சேஷத்வ சொரூபத்திற்கிணங்க (அதாவது பர்த்ரு, பார்யா என்ற முறையில்) ஈஸ்வரனை மகிழ்விக்கும் பொருட்டு பர்த்தாவினுடைய படுக்கையில் இருக்கும் பத்னி போலவும், தாயானவள் குழந்தையைப் போற்றும் பொருட்டு, அதன் தொட்டிலைத் தாலாட்டுப்பாடி ஆட்டிக்கொண்டு குழந்தையையும் கவனித்துக் கொள்வது போலவும், ஈஸ்வரனைச் சொல்லுகிற முதல் பதமான அகாரத்தையும் தன் குழந்தைகளான சேதனர்களைக் குறிக்கும் மூன்றும் பதமான மகாரத்தையும் ஆராய்ந்தால், அவ்விஷயத்தில் தனக்குண்டான பத்னியாகிற நிலைக்கும் தாயாகிற

தன்மைக்கும் ஏற்றபடி மணாளனை மகிழ்விக்கை, மக்களைரக்ஷித்தல்என்ற தன் இருதன்மைகளுக்கும் ஏற்றதாய் எப்பொழுதும் உடையவளாக இருப்ப திலேயே அகாரத்திலும், மகாரத் திலும் ஸ்ரீ சம்பந்தம் உண்டு என்று சொல்லப்பட்டது. பிராட்டிக்கு அகா ரம் படுக்கை, மகாரம் தொட்டில. அகார வாச்யனை எம்பெருமா னுக்கு சேஷபூதன் நான் என்று மகாரார்த்தம் சொல்லுகிறது என்று ஸ்ரீ பட்டரும் அருளிச் செய்துள்ளார்.

**பிராட்டி ஜீவர்களை சேர்ந்தவளா? ஈஸ்வரனைச் சேர்ந்தவளா?**

பிராட்டி ஜீவர்களை (சேதனர்களை) சேர்ந்தவளா, ஈஸ்வரனைச் சேர்ந்த வளா என்பதையும் ஆராய்வோம். 'ம' என்ற எழுத்தின் ஒலியை ஆராய்ந்தால் பிராட்டி சேதனர் கோஷ்டியில் சேர்ந்தவள் என்பது நன்கு விளங்கும். எவ்வாறெனில் (ம்) ஜீவ வாசகம் ஆண்பால் (மா) லக்ஷ்மியின பெயர்பெண்பால். எனவே அகாரத்தில் கலயாண குணங்கள எவவாறுஈஸ்வரனைவிட்டுப்பிரியாமல் இருக்கின்றனவோ அதுபோல் பிராட் டியும் ஈஸ்வரனை விட்டுப் பிரியமா லிருக்கிறபடியால் ஸ்ரீ சம்பநதம் சொல்லப்படுகிறது. தவிர பிராட்டி ஈஸ்வர சொரூபத்தில் சேர்நதவளா யிருப்பதால் அகார வாச்யமும், சேத னரில் சேர்ந்தவளாயிருப்பதால் மகாரவாக்யமும் ஆக இரணடு சம்பந் தங்களும் பிராட்டிக்கு உண்டு என்ப தற்காகவே சூத்திரம் 42ன் கடைசி பதங்களான ப்ரதம (அகாரம) சரம (மகாரம்) பதங்களை விடாதேயிருக் கும் இருப்பு என்று ஸ்ரீ உலாகாசார் யர் அருளிச் செய்துளளார்.

**பிராட்டி வாழித்திருநாமத்தில் வரும் 6ம் அடிக்கும் மகாரத்திறகும் உள்ள சம்பந்தம்**

வாழித்திருநாமத்தின் 6-ம் அடி, 'இருபத்தஞ்சுட்பொருள் மாலியம்பு மவள் வாழியே' என்று வருகிறது. அதாவது முன்பு விவரிக்கப்பட்டிருக் கும்படியாக 25வது தத்துவமாக மகாரம் வருகிறது. இந்த மகாரத் திற்கு பிராட்டி சம்பந்தமும் உண்டு. தவிர பிராட்டி சேதனர், ஈஸ்வரன் என்ற இரு கோஷ்டியிலும் சேர்ந்தவ ளாகி இருக்கிறாள். எனவே பிராட் டிக்கு அகாரவாசயமும் மகார வாச் யமும் உண்டு என்றுகிறது. தவிர பிராட்டியும் எப்போதும் பெருமாளை விட்டுப் பிரியாதவளாக இருக்கிறாள். எம்பெருமான் ரக்ஷித்தல் என்ற மகத் தான குணத்தையுடையவளாக இருக் கிறாள். பிராட்டியும் ரக்ஷித்தலில் பெருமாளுக்கு எந்த விதத்திலும் குறைந்தவளல்ல. சேதனர்கள் எம் பெருமானை அடையும் பொருட்டு அவன் பக்கலில் வருகிறார்கள். சேத னர்கள் குற்றங்கள் பல செய்திருப்ப தினால் தண்டிக்க நினைக்கிறான். அப் போது பிராட்டி தன் பிரதான குண மான தாய்க்கருணை என்ற குணத் தால் பெருமாளையும், சேதனர்களை யும் குளிர கடாக்ஷித்து தான் புருஷா காரமாக நின்று ஜீவன்களின் குற்றங் களைப் பாராமல், அவர்களை ஏற்றுக் கொள்ளும்படியாக சிபாரிசு செய்து பெருமாளுக்கும் ஜீவாத்மாக்களுக் கும் துணையாக நிற்கிறாள என்பதே 6ம் அடிக்குரிய பொருளாகும். இக் கருத்தையே சுலபமாக கீழ்க்காணும் வகையில் சொள்ளலாம். அதாவது 25வது தத்துவத்தைக் குறிககும் (அதாவது ஆத்மாவை) எழுத்தான 'ம' காரம், ஆத்மாவாகவும்,ஆத்மாக் களுக்கெல்லாம் ஆத்மாவாக இருக் கும் பிராட்டியையும் குறித்துப் பெரு மாளை விட்டுப் பிரியாமல் இருந்து கொணடு சேதனர்கள் உஜ்ஜீவித்துக கொணடிருக்கிறாள் எனறு சொல்ல லாம்.

**முடிவுரை :**

ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திற்கு மட்டுமே உரியதான ஒரு கொள் கை, "சரீராத்ம பாவம்" என்பதான பிரதான பிரதிதந்ரம் ஆகும். பிரதிதந்ரம் என்ற சொல் லுக்கு வேறு ... பொதுவில்லாத ஒரு தனிப்பட்ட கொள்கை என்று பெயர். இந்த உட லுக்கு ஆத்மா எப்படியோ, அப்ப டியே, இந்த ஆத்மாவுக்கும் ஆத்மா வான பரமாத்மா. அதாவது ஈஸ்வர னுக்கு சேதன அசேதனப பொருள் கள் (உயிருள்ளது, உயிரற்றது) ஆகிய எல்லாம் சரீரம். ஈஸ்வரன சரீரி, ஈஸ்வரன் அவைகளில் ஆத்மாவாய் இருந்து, சரீரமாகவும் இருப்பதற்கு ஆதாரமாயிருக்கிறான். ஜீவாத்மா வுக்கும், பரமாத்மாவுக்கும் ஒன்பது விதமான சம்பந்தங்கள் இருக்கிறது என்று ஸ்ரீ லோகாசார்யா அருளிச செய்துள்ளார். பரமாத்மாவே அறி யத்தகுந்தவன் என்றும் அவனை அறிந்து கொள்பவன் ஜீவாத்மாதான என்றும் கூறுகிறார். மகாரம் ஆத்மா வைக் குறிப்பதால், அகாரவாச்ய னை எம்பெருமானை மகாரவாச்ய னை ஆத்மா அறிந்து கொள்ளுகிறது என்ற காரணத்தால் இதற்கு, "ஞாத்ரு ஞேய சம்பந்தம்" எனப் பெயராகும் என நம் பூர்வாசார்யர் அருளிச் செய்துள்ளார். எனவே ஜீவாத்மாக்களாகிய நாம், பரமாத் மாவை நன்கு அறிந்து கொணடு அவனைச் சரணடைந்து, பகவானுக் கும், பாகவதர்களுக்கும் கைங்கர்யங் கள் செய்து, எம்பெருமான் திருவடி களை அடைந்து உஜ்ஜீவிககவேணும் என்ற பிரார்த்தனையோடு இக்கட் டுரையை முடிககிறேன்.

ஆழ்வார் ஆசார்ய ஜீயர் திருவடி களே சரணம்.



# வேண்டும் வரந்தரும் ஸ்ரீப்ரஸன்ன வெங்கடேசன்



பாதூர் என்னும் திவ்ய க்ஷேத்ரம் சென்னை - திருச்சி மார்கத்தில், நாயன்மார்களின் முதன்மையான நால்வருள் ஒருவரான சுந்தரர் அவதரித்த " திருநாவலூர் " (கடிலம்) என்ற தலத்திற்கும் உளுந்தூர்பேட்டைக்கும் இடையில் பஞ்ச கிருஷ்ணாரணய க்ஷேத்ரத்தின் ஆக்னேய பாகத்தில் கருட நதிககுத் தெனகரையில் அமைந்துள்ளது. சேந்தமங்கலததைத் தலைநகராகக கொண்டு ஆணட நரசிஙக முனையர் என்னும் சிறறரசனின் வசந்தமண்டபம் இருந்த ஊராகும். மேலும் சோழ அரசனின் படைஊரான இவ்வூரின் ஓர் துவாதசித் தினத்தன்று குலோத்துங்கன் என்னும் சோழ அரசனால் வேதம் கற்ற அந்தணர்க்குத் தானமளித்த அக்ரஹாரத்தில் அமையப்பெற்றது ஸ்ரீ ப்ரஸன்ன வெங்கடேசப் பெருமாள் திருக்கோயில்.

பல படையெடுப்புகளால் க்ஷீணமடைந்த இததிருக்கோயில் சற்றேறக் குறைய 150 ஆண்டுகளுக்கு முன்பு மாத்வ வகுப்பைச் சேர்ந்த ஒரு அதிகாரியின் தூண்டுதலால் இவ்வூர் பெரியோர்களின் நன் முயற்சியால் இத் திருக்கோயில் கட்டிமுடிக்கப்பட்டு சுமார் 50 வருடங்களுக்கு முன்பு கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. அதன்பின் கடந்த 24-8-1986 அன்று இத்திருக்கோயிலின் குமபாபிஷேகம் நடைபெற்றது. இத்திருக்கோயில் இந்து அறநிலையத்துறையின் கீழ் வருவதாகும்.

முதலாழ்வார்களான பொய்கை முனி, பூதத்தார், பேயாழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட நடுநாட்டுத்திருப்பதிகளில் ஒன்றான திருக்கோயிலூர் ஸ்ரீ தேஹளீசப்பெருமாளால் நேரில் அபிமானிக்கப்பட்ட விசேஷத் தன்மை உடையது. மேலும் ஸ்ரீ அஹோபில மடம் ஜீயர்களாலும் சங்கராச்சாரிய சுவாமிகளாலும் மற்ற பெரிய மஹான்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலின் வடமேற்குப் பாகத்தில் ஸ்ரீ அஹோபில மடம் 36-ம் பட்டம் ஸ்ரீநிவாச யதீந்த்ர மஹா தேசிகனின் பிருந்தாவனம் அமைந்துள்ளது விசேஷமானதாகும்.

இக்கோயிலின் முன்புறம் திவ்ய க்ஷேத்ரங்களில் இருப்பதுபோல் கருடஸ்தம்பம் உள்ளது. அதன் பின் நாலு கால் மண்டபம். அதை அடுத்து திருவாயிலைத் தாண்டினால் ஏழு படிகள். அதற்கு மேல் பலிபீடம், த்வஜஸ்தம்பம், கருடன் சன்னதி. ஏழு படி

திரு. எஸ் வீரராகவன் - பாதூர்.

களைத் தாண்டி இடதுபுறமாகத் திரும்பி உடன் வலதுபக்கம் சென்றால் 16 கால் மண்டபம். அதில் வீர ஆஞ்சனேயர், துவார பாலகர்கள் உள்ளனர். இவர்களைத் தாண்டி உள்ளே சென்றால் கர்பக்கிருஹம சற்று தூரத்தில் தெரிகிறது. அதற்கு முன் வலப்பக்கம் ஆழ்வார்-ஆச்சாரியர்கள் - தேசிகன் சன்னதிகள். இடப்பக்கம் அலர்மேல்மங்கைத்தாயார் சன்னதி. இவர்களைத் தரிசித்து விட்டு நேராகச் சென்றால் கர்பக்ருஹத்தில் வரதனாகவும், ஸ்ரீனிவாசனாகவும் காட்சி அளிக்கும் ஸ்ரீ ப்ரஸன்ன வெங்கடேசப் பெருமாள உபய நாச்சிமார்களுடன் உறைகின்றார். அவருடன் நர்த்தன கிருஷ்ணன், சக்கரத்தாழ்வாரும் வீற்றிருக்கின்றனர். பிரதி வருஷம் புரட்டாசி மாதம் அமாவாசைக்கு மறுநாள் கொடியேற்றி தேசிகன் திருநக்ஷத்ரமான திருவோணத்தில் தீர்த்தவாரியாக பத்து நாட்கள் உன்னதமாக பிரம்மோத்ஸவம் கொண்டாடப்படுகிறது. விசேஷமாக நாகவாஹனம், ஐந்தாம் நாள் கருட வாஹனம், யானை வாஹனம், திருக்கல்யாணம் ஆகியவை கொண்டாடப்படுகின்றன. இத் திருக்கோயிலில் வைகானஸ ஆகமப் படி திருவாராதனம் நடைபெற்று வருகின்றது.





ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸவாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகானகள ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன பலன்களும | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) $6\frac{1}{4}\times6\frac{1}{4}$ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆணடுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யநதிரங்கள் சோத்து வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுக்கும், எதிரிகள் பொறுமை இவைகளை நீக்கி சுபிட்சத்தை உணடுபணணும் | 1750-00 |
| 6. | சாவ ஜன மன தன ஆகர்ஷணம் சாமராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சோந்து வியாபாரததிலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீககி எதிரிகள் இல்லாமல் செய்யவும பில்லி, சூனியம், ஏவலகளை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ.(கோல்டுபிரேம்)மேற்கணடபலனைத் தரவல்லது | 500-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாம்பிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உணடாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வநத திருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம டாலர் அம்பாள கடாட்சத்தை நிலைத்திருக்கச செய்யவல்லது | 70-00 |
| 16. | கண திருஷ்டி படம் (கோல்டு பிரேம) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண திருஷ்டி தொலலைகளை நீக்கி விபததுக்களைத தடுத்துக காப்பாற்ற வலலது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண் திருஷ்டி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும தொல்லைகளை நீககிக் காப்பாற்ற வலலது | 150-00 |
| 18. | தத்தாதரேயர், விக்ன கணபதி, ம்ருத்யஞ்யம (சாவ ஜெய யநத்ரம்) 8×24 செ.மீ. இந்த மூனறு யந்திரங்கள் சேர்தது ஆகாயத்தில் செல்லும் விமானம முதல லாரி கார் வரை கண திருஷடியால் ஏறபடும விபத்தைத் தவிர்ககவல்லது. | 500-00 |
| 19. | இனனும் பலவிதமான டாலர்கள், மாலைகள் அனைத்தும் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டன. | |

கோவிலில்களுக்கு வேணடிய சகல யந்திரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும. ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கணட விலாசத்திற்கு விணணப்பிக்கவும். மேற்கணட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான பத்திரிகைகளில் தெரிவிகக முடியும்.


ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசகதி நிலையம்,

153, லாயட்ஸ் ரோடு, (ஸடேட் பேங்க் எதிரில), கோபாலபுரம், சென்னை - 600086.

போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு : ... 861254


**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

# திருமாலின் சயனத் திருக்கோலங்கள்

(சென்ற இதழ்த தொடாசசி)

வடபத்ரசயனம்—ஸ்ரீ விலலிபுத்தூர் :

தேவர்களின வேண்டுகோளின் பேரில் காலநேமி என்னும் அரக்கனைத் திருமால் சக்ராயுதத்தால் அழித்தார். சகராயுதத்தை யமுனை, கஙகை, சரஸ்வவதி ஆகிய நதிகளால் நீராட்டித தூய்மைப்படுத்தினுர். அருகிலுளள ஆலமரத்தடியில்விமலாகிருதி என்னும் விமானத்தின கீழ், தேவியர்,பரிவார தேவதைகள்,பிருகு, மார்க்கணடேயர் ஆகியோர்சூழ ஆதிசேஷன் மீது பள்ளிகொணடார். ஆலமரத்தடியில் எழுந்தருயளிதால் வடபத்ரசாயி என்ற பெயர் பெற்ருர். அத்தலமும் வடேசுவரபுரம் எனப் படடது. இன்றும் அதே கோலத்தில் சேவை சாதிக்கிருர்.

புஜங்கசயனா் :

அரவத்தின் மீது கரத்தைத் தலைக்கு உயரமாக வைத்துக்கொணடு சயனித்திருககும் கோலம புஜங்க சயனம் எனப்படும். இதே கோலத்தில் பல ஆலயஙகளில திருமால் காட்சியளிக்கிருர்.

திருவரஙகம் :

வைணவாகள, கோயில என்ருல் திருவரங்கத்தையே குறிப்பிடுவர். திருவரஙகநாதனை ஆழ்வாாகளால மஙகளாசாசனம செயயப்படட “பாண பெருமாள” ஆவார். பதினைநது அடி நீளமுள்ள கருவறையை ஆக்கிரமிததுளள சேடனின பாயவில திருக்கண வளாநதிருககிருர். ஒரு கரம தலையைத் தாங்கும. மற்றொன்று முழங்கால் வரை நீணடுள்ளது. கிரீடம், முத்தாரம், கௌஸ்துபம், வனமாலை ஆகியவற்றை அணிந்துள்ள அககரிய மேனியன தைலக் காப்பில் மகிழந்துள்ளார். அருகே தேவியரும், நான்முகனும் இல்லை.

திருவளளுர் :

சென்னையிலிருந்து 40 கி.மீ. தொலைவிலுளள திருவள்ளுரில் விசயகோடி விமானத்தினகீழ், புஜங்க சயனராகக் கிழக்கே திருமுக மண்டலம் கொணடு காட்சியளிககிருர் ஸ்ரீவீரராகவப்பெருமாள். நாபிக் கமலத்திலுள்ள நான்முகனுக்கு இவரது இடது கரம் பிரணவத்தத்துவத்தை உணாத்தியவாறு உள்ளது. வலது கரம் சாலிகோத்திர முனிவரின தலையில் அபயப் பிரதானம் செய்கிறது. சாலிகோத்திர முனிவர் இத்தலத்தில் தவமியற்றியபோது ஒரு வயோதிகர் அவரது விருந்தினராக வந்தார். உணவு உணடபின் படுக்க இடம் நாடி ‘எவ்வுள்’ என்று வினவினராம். முனிவர் காட்டிய பரண்சாலையில் வயோதிகர் தனது உண்மையான சயனக் கோலததில், வீரராகவப் பெருமாளாகவே பள்ளிகொண்டாா. வயோதிகரான திருமால் தாம் படுக்க ‘எவ்வுள்’ என வினவியதால, ஊரு ‘திருஎவ்வுள்’ எனபபடடு, பினனர் திருவளளுராக மருவியது.

திருவனந்தபுரம் :

மலைநாட்டுத் திருவனநதபுரத்தில பாமபணை மீது பள்ளிகொணடுளள அனநதபதமநாபரின் முழு உருவத்தை மூன்று வாயில்கள் மூலமாகவே தரிசிக்கலாம. தலைவாயிலில் திருமுடியையும, நடுவாயிலில் திருநாபியையும், கோடி வாயிலில் திருப்பாதத்தையும் காணலாம். சுதையாலான இந்த மூர்த்தியின மேனியில் 1200 சாளக்கிராமங்களை இழைத்துள்ளனர். ஆதியில் மிகவும் பெரியவராக இருநத இநத மூர்த்தி இன்று குறுகிவிடடாராம். ஆதியில் அனந்தைங் காடு எனப்பட்ட இப்பகுதியில் ஸ்ரீவாங்கள் என்ற முனிவருக்கு முன் இலுப்பை மரமாகக் காட்சியளித்த திருமால், பின்னர் பள்ளிகொண்டாராம்.

திருவாட்டாறு :

குமரி மாவட்டததிலுள்ள திருவாட்டாறு என்ற பதியிலும் ஆதிகேசவன் என்ற பெயரில் திருமால் பள்ளிகொண்டுள்ளார். வரம் பல பெற்று நல்லோருக்கு அல்லல்கள் அளித்து வந்த கேசன் என்ற அரக்கனை மற்போரில் கீழே தள்ளி அவன் மீது ஆதிசேடனின் பாயை விரித்து அதன் மீது பள்ளிகொண்டார். பதினெட்டு அடி நீளமுள்ள இவ்வுருவம் கடுகு சர்க்கரை என்ற கலவையால் ஆனது. திருவனந்தபுரம் போலவே இங்கும் பெருமானை மூனறு வாயில்களின் வழியாகவே தரிசிக்கலாம்.

---

திரு. எம, இராஜகோபாலன்,
சென்னை,

---

யோகாசனம—தில்லை சித்திரகூடம்:

சைவாகள் பெரு விருப்புடன் வழிபடும் தில்லையமபலத்தில் திருமால் கோவிந்தராஜராகப் பள்ளிகொண்டுள்ள சித்திரகூடம் என்ற சந்நிதி உள்ளது. கோயில் அமைப்பு உடலை ஒத்தது. அம்பலம், கூடம என்று இதயம் இரு பகுதிகளாக உள்ளன. அம்பலததில மறைந்து நின்ற அரனுர் வெளியில் அம்பலவாணராக நடம் புரிகிருர். கோவிந்தராஜர் கூடத்துள் அறிதுயில் கொள்கிருர். சத் சித் ஆகியவற்றின் இணைப்பை இத்தலம் புலப்படுத்துகிறது. தேவர், முனிவா, பரிவாரங்கள் சூழ நான்கு கரங்களுடன், சங்கு, சக்கரம் ஏந்திய

## சந்தாதாரர்களுக்கு...

*31-12-89*—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர் களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித் துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப் பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும் முகவரி யுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

19 26 28 30 31 32 37 38 57 104 113 116 118 126 132 137 142 145 149 150 154 170 250 255 259 261 263 266 268 271 273 275 278 282 439 440 441 442 443 445 446 452 455 457 460 466 467 469 470 473 475 477 478 484 522 586 588 592 597 599 600 602 850 851 859 862 873A 874 877 880 884 888 891 893 89' 907 908 912 915 918 924 926 928 933 934 939 940 942 946 948 950 951 952 958 959 960 961 1099 1449 1501 1532 1572 2098 2100 2102 2123 2126 2162 2237 2238 2241 2243 2278 2286 2288 2295 2297 2299 2303 2307 2312 2313 2317 2318 2326 2329 2333 2338 2351 2357 2358 2368 3272 3550 8624 3631 3653 3656 3658 3854 4038 4089 4479 4914 4948 முதல் 4951 4953 முதல் 4962 4964 முதல் 4973 4976 4978 முதல 4980 4982 4984 முதல் 5010 5012 முதல் 5020 5022 முதல் 5026 5028 முதல் 5033 5035 முதல் 5050 5113 5208 5412 5482 5583 5585

வாறு யோக சயனராகக் கிழககு நோக்கித் திருமுக மண்டலம் கொண் டுள்ளார்.

**வீர சயனம்—திருஇந்தளூர (திருவிழந்தூர்)**

மயிலாடுதுறையின் ஒரு பகுதியான திருவிழநதூரில் திருமால் பரிமள ரங்கராகப் பள்ளிகொண்டுள்ளார். காவிரியில் நீராடிய வேதங்களுக்கு அருளி, பரிமள வாசனையுடன் காடசி யளிப்பதால் இவர் பரிமளரங்கர் எனப்படுவார். ஆதிசேடன் மீது பள்ளிகொணட கோலம்; நானகு கரங்கள். நாபியில் நான்முகன்; திரு முடியருகே ஆதவனும் திருவடியருகே சந்திரனும் வணங்கிநிற்கினறனர். திரு முடியருகே கங்கையும், திருவடியருகே காவிரியும் உள்ளனர். இவ்வாறு வீர சயனராக வேதச் சக்கர விமானத் தின் கீழ் திருமால் அருள்பாலிக்கிறார்.

**பிற சயனததிருமேனிகள்:**

**உத்தர அரங்கமான பளளிகொணடா:**

பிரம்மாவுடன் சச்சரவு ஏற்பட்ட தால் அவர் புரிந்த யாகத்தைக்கலைக்க சரஸ்வதி நதி வடிவில் பாய்ந்தாள. நான்முகனின் வேணடுகோளின்பேரில் திருமால் பள்ளிகொணட பெருமா ளாகப் பாலாறறுககுக் குறுக்கே எழுந்தருளினார். இத்தலமே பள்ளி கொணடா எனற பெயருடன் வேலூ ருக்கு அருகே உள்ளது. ஸ்ரீ தேவி இடது கரத்தையும, பூதேவி திருவடி களையும் தாங்க ஆதிசேடன மீது பெரிய திருவுருவத்துடன் பள்ளி கொணடுள்ளார். கிரீடம், குணடலம், திருமண்காப்பு, வேட்டி, உத்தரீயம் ஆகியவற்றை அணிநதுள்ளார். முக மதியப் படையெடுப்பின்போது அந் நியர்களை ஏமாற்றுவதற்காக உண டாக்கப்பட்ட கஸதூரிரங்கரின் சிறிய உருவமும் இக்கோயிலில் உள்ளது.

**பெருமாள் (யதோத்தகாரி):**

காஞ்சியிலுள்ள திருவெஃகா எனற பகுதியில் திருமால் பள்ளிகொண் டுள்ளார். தன்னைப் போற்றிப் பாட மறுத்த திருமழிசையாழவாரின் சீட ரான கணிகண்ணனை நாடுகடத்தினார் ஒரு பல்லவஅரசர். உடனே அவ்வூரில் பள்ளிகொணடபெருமாளை அக்கோ யிலை விட்டு வெளியேறுமாறு திருமழி சையாழவார் பாடினார். பெருமாளும் அவ்வாறே ஆலயத்தைவிட்டு வெளி யேறினார். தவறையுணர்ந்த மனன னும கணிகணணனை அருக்குள் வரச செய்தார். ஆலயத்தில் பழைய கோலததில் அமர்ந்து அருளுமாறு திருமழிசையார் பாடியவுடன், திருமால் அதே ஆலயத்தில் சயனித்தார. திருமழிசை யாரின் சொற்படிக கேட்ட பெரு மாள சொனனவண்ணம செய்த பெருமாள் ஆனார். திருசசி மாவட் டததிலுள்ள அன்பில் எனுமதலததில் சுந்தரராஜராகவும், உத்தமர் கோயில என்ற பதியில் புருஷோத்தம ராகவும், திருப்பேர் நகரில் (கோயி லடி) அப்பக்குடததானாகவும் திரு மால் சயனம் கொணடுளளார. காஞ்சி வரதராஜப் பெருமாள் ஆல யத்திலுள்ள திருக்குளத்தில் அத்தி மரத்தாலான வரதர் ஜலசயன ராகவே பள்ளிகொணடுள்ளார். 45 ஆணடுகளுககு ஒரு முறை இவரை வெளிக்கொணர்ந்து வழிபடுவர். சேலம மாவட்டம் நாமக்கல்லிலுள்ள குகை ஒனறில கார்க்காடகன எனும் ஸாப்பததின மீது, தெற்கே தலையும, வடக்கே காலுமாக அரஙகர் பள்ளி கொண்டுள்ளார். மதுரை நகருக்கு அருகேயுளள திருமோகூரிலும பள்ளி கொணட பெருமாளின் சநநிதி உள்ளது. பரமபதத்தில் உளளது போலவே ஸ்ரீதேவி, பூதேவியுடன் ஏகாந்தமாக இங்கு சேவை புரி கிறார. புதுக்கோட்டைககு அருகே யுள்ள திருமயம் எனும் தலத்தில் 30 அடி நீளமுளள சயனரை ஒரு குடவரையில காணலாம். இரு கரங்

கள அனந்தன, திருமகள் ஆகியோருக்கு அருள்புரிகின்றனர். பொருனையாற்றின் கரையிலுள்ள நவ திருப்பதிகளுள் ஒன்றான திருக்கோளூரில் வைத்தமாநிதி என்ற பெயருடன் பள்ளிகொண்டுள்ளார். தனது இடது கையை உயர்த்தி, உள்ளங்கையை நோக்கியிருப்பதுபோல் தோன்றுகிறார். தனது நிதியையெல்லாம் குபேரனுக்கு அளித்தபின் அவை எங்குள்ளன என்று தேடுபவர்போல் இவ்வாறு காட்சியளிக்கிறாராம். மற்றொரு திருப்பதியான திருப்புளிங்குடியில் காய்ச்சின வேந்தன் புஜங்க சயனராகக்கிழக்கே திருமுகமண்டலம் கொண்டுள்ளார். திருக்கோளூர், திருப்புளிங்குடி ஆகிய தலங்களிலுள்ள இத்திருமேனிகள் மிக நுண்ணிய வேலைப்பாடுகளுடன் அமைந்தவை. தஞ்சை மாவட்டத்திலுள்ள பல தலங்களிலும் திருமாலின் சயனக் கோலம் காணலாம். கும்பகோணத்திற்கு அருகே புள்ளம் பூதங்குடியில் வல்வில் ராமராகவும், கபிஸ்தலத்தில் கஜேந்திர வரதராகவும், ஆதனூரில் ஆண்டளக்கும் ஐயனாகவும், திருவெள்ளியங்குடியில் கோலவில்லிராமராகவும், பெருமாள் புஜங்கசயனராகக் கோலம் கொண்டுள்ளார், மயிலாடுதுறைக்கு அருகேயுள்ள சிறுபுலியூரில் அருமாகடல் என்ற பெயருடன் சேவை தருகிறார். திருநாங்கூர் திருப்பதிகளுள் திருத்தெற்றியம்பலத்தில் செங்கண்மாலாகவும், திருநகரியில் கல்யாண ரங்கநாதராகவும், பள்ளிகொண்டுள்ளார். மலைநாட்டுத் திருப்பதிகளுள் திருவித்துவக்கோட்டில் உய்ய வந்த பெருமாள் புஜங்க சயனராகத் தோன்றுகிறார்.

மஙகளாசாசனம் பெறாத தலங்களில் சயனமூர்த்தி :

ஆழ்வார்களில் பாசுரம் பெறாத தலங்களிலும் சயனக் கோலத்தில் திருமாலை வழிபடலாம். நாகப்பட்டிணத்திற்கு அருகேயுள்ள கீழரங்கம் என்ற பதியில் கோபுரம்போல உயர்ந்துள்ள ரங்கவிமானத்தின்கீழ் ரங்கநாதர் சயனித்துள்ளார். திருக்கோயிலூருக்கு அருகே பெண்ணையாற்றின் கரையிலுள்ள 'திருவரங்கம்' என்ற கிராமத்தில் ஸ்ரீதேவி, பூதேவி சமேதரான அரங்கநாதரின் நீண்ட உருவம் (24 அடி) உள்ளது. கம்பன் பிறந்த பதியான தேரெழுந்தூரில் ஆமருவியப்பன் ஆலயத்திற்கு அருகேயுள்ள அரங்கநாதரின் சிறு கோயில் மீது முத்துஸ்வாமி தீட்சிதர் கீர்த்தனை இயற்றியுள்ளார். தேசிங்குராஜனின் குலதெய்வமான அரங்கநாதரைச் செஞ்சி நகருக்கு அருகேயுள்ள சிங்கவரத்திலுள்ள ஒரு குன்றில் காணலாம். கரூரிலுள்ள போகசயனப் பெருமாள் மீது 5 தலைநாகம் குடைபிடிப்பதைக் காணலாம். இவர் சயனித்துள்ள நாகத்தின உடல் ஐந்து சுற்றுகளாக உள்ளது. மேட்டுப்பாளையத்திற்கு அருகேயுள்ள காரமடை என்ற தலத்திலுள்ள அரங்கநாதர் சுயம்புவாகத் தோன்றியவர். எனவே அவரது திருவுருவம் அம்மனின் விக்கிரகம்போல, முகம் மட்டும் கொண்டதாக விளங்கும். ஈரோடு நகரில் கஸ்தூரி ரங்கநாதர் பள்ளிகொண்டுள்ளார். காவிரிக்கரையிலுள்ள மூன்று அரங்கங்களுள் சிவசமுத்திரம், ஸ்ரீரங்கப்பட்டினம் ஆகியவை கர்நாடக மாநிலத்தில் உள்ளன. நின்ற, இருந்த, கிடந்த மூன்று கோலங்களிலும் திருமாலை மதுரை (கூடலழகர் கோயில்), திருக்கோஷ்டியூர், உத்தரமேரூர், மன்னார் கோயில், காஞ்சிபுரம் (வைகுந்த பெருமாள் கோயில்), திருக்குறுங்குடி ஆகிய பதிகளில் உள்ள ஆலயங்களில் தரிசிக்கலாம்.

இலக்கியத்தில் சயனக்கோலம் :

ஆழ்வார்கள் பற்பல பதிகளிலுள்ள பள்ளிகொண்ட பெருமானைப் பாராட்டி எண்ணற்றப் பாடல்களைப் பாடியுள்ளனர்.

''ஆழியஞ் செல்வனே எழுந்தான்
அரவணை மேல் பள்ளிகொண்டாய்
தோழியும் நானும் தொழுதோம
துகிலைப்பணித்தருளாயே''

(ஆண்டாள்—524—நாச்சியார் திருமொழி)

''சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கத்தரவணையில் பள்ளி கொள்ளும்
மாலோனைக் கண்டின்பக் கலவி யெய்தி''

(குலசேகரர்-பெருமாள் திருமொழி —654)

''விடத்தவாயொராயிரம் ராயிரம் கண்வெந்தழல்
விடத்துவீழ் விலாத போகம் மிக்க சோதி தொக்கசீர்
தொடுத்து மேல்விதானமாய பௌவ நீரராவணை
படுத்த பாயல் பள்ளி கொள்வதென் கொல் வேலை வண்ணனே''

(திருமழிசையாழ்வார் திருவிருத்தம் —769)

''குடதிசை முடியை வைத்துக் குண திசை பாதம் நீட்டி
வடசிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கி
கடல்நிறக் கடவு ளெந்தை அர வணைத் துயிலுமா கண்டு
உலலெனக்குருகுமாலோ என் செய் செய்கேனுலகத் திரே''

(தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை—890)

நிமலன் நின்மலன் நீதி வானவன்
நீள் மதிளரங்கத்தம்மான் திருக்
கமல பாதம் வந்தென் கண்ணிலுள்
ளன வொக்கின்றதே

(திருப்பாணாழ்வார்-அமலனாதிபிரான்-927)

''நண்ணாத வாளவுண ரிடைப்புக்கு வானவரை
பெண்ணாகி யமுதூட்டும் பெருமானார் மருவினிய
தண்ணார்ந்த கடல்மல்லைத் தலசயனத் துறைவாரை

எணணுமத யருபபாரை யறைப .
பொழுது பெண்ணுமே ''
—திருமங்கை ஆழ்வார் -
பெரியதிருமொழி-2 (1098)

பழுதே பலபகலும் போயினவெனறு
அஞசி
அழுதேன் அரவணைமேல் கணடு-
தொழுதேன்
கடலோதம காலலைபபக் கனிவளருமு
செங்கண்
அடலோத வண்ணர் அடி,
(பொய்கையாழ்வார்-
முதல் திருவந்தாதி-2097)

பணிந்துயாந்த பௌவப படுதிரைகள
மோத
பணிந்த பணிமணிகளாலே-அணிந்து
அங்கு
அனந்தன் அணைக்கிடக்கும அமமான
அடியேன்
மனந்த னணைக் கிடக்கும் வந்து
மூன்றும் திருவந்தாதி
—பேயாழ்வார் (2296)

ஆர்த்தோ தம்-தம்மேனி தாள
தடவத் தாங்கிக் கிடநத தம்முடைய
செம்மேனிக கண்வளர்வார் சீா
—நம்மாழ்வாா
பெரியதிருவந்தாதி-(2599)

நின் ஈரடி ஒன்றிய மனத்தால ஒரு
மதிமுகதது
மங்கையர் இருவரும் மலரன
அங்கையில
முப்பொழுதும் வருட அறிதுயில்
அமாநதனை
திருமங்கையாழ்வார்-திருவெழு
கூற்றிருக்கை (25-29)

அஷ்டப்பிரபந்தம் பாடிய திவவிய கவி பிள்ளைப் பெருமாள் ஐயஙகார் பள்ளி கொண்ட பரமனைப் போற்றி யுள்ளார்.

பூங்காவிரி புனறகோவிலுள்ளே
மிகக போகம எல்லாம
யாம காண யோகததுயில் கொண்ட-
வாறு எள்ளும் எண்ணெயும போல்
நீங்காது உலகதது உயிருக்கு உயிா
ஆதி நியாமகன ஆய்
ஓங்காரமாய் அதன உட்பொருளாய்
நின்ற ஒண்சுடரே
(திரு அரங்கத்து மாலே)

சங்ககால இலக்கியங்களில் திருமாலின் சயனத் திருக்கோலம் சிறப்பிக்கப்பட்டுளளது. கடியலூர் உருத்திரஙகண்ணனாரின் பெரும்பாணாற்றுப் படையில் காஞ்சியில் (திருவெஃகா) திருமால் ஒரு யானை படுத்துள்ளது போல் பள்ளிகொண்டுள்ளதாக இயம்புகிறார். புறநானூறறில் 'நீலநிற உருவின் நிமமியோன்' எனறும், சிலப்பதிகாரத்தில் 'நீலமேனி நெடியோன் கோயில்' என்றும் குறிப்புக்கள் உள்ளன.

கம்பராமாயணத்தில் வசிட்டர் மூலம் பள்ளி கொண்ட மூர்த்தி பூவுலகில் திருவவதாரம் செய்வது பற்றிய குறிப்பு வருகிறது.

"அலைகடல நடுவண் ஓா அனநதன
மீமிசை
மலையென விழிதுயில் வளரும்
மாமுகில
கொலைதொழில அரக்கர்தம்கொடுமை
தீரப்பான் எனறு
உலை உறும அமரருக்கு உரைத்த
வாய்மையை
—கம்பர்

தற்காலத்தில் தோன்றிய சிறறிலக்கிய நூல்களிலும், வடமொழி துதிப்பாடல்களிலும் பள்ளி கொணட பெருமாள் போறறப்படுகிறார்.

பள்ளிகொணட தத்துவம :

திருமால் காக்கும் தொழிலுக்கு அதிபதி. உலகைக் காக்கும் பெருமாள் உறங்குவது போல் கோலம் கொணடுள்ளாா. அவரது உறக்கம பொய் உறக்கம். உலகைப் படைத்து அதனைப் பிரளயகாலத்தில வயிறறில் ஒளித்து வைத்துக் காப்பாற்றி பினனர் வெளிப்படுத்தியதாகக் கூறுவர். உயிர்கள் மீது இவ்வளவு பரிவு கொணட திருமால எவவாறு நித்திரை செய்ய இயலும்? அவர் ஆதிசேடன மீது பளளிகொண்டு உறங்குவது போல தோன்றினாலும் உணமையில் யோக நித்திரையே புரிநது உலகில் நன்மைகளை நிலைநாட்டுகிறார். பெருமாளபளளி கொணடுள்ள இடங்கள்இரண்டு. 1) பாற்கடல் 2) ஆலிலை. கடல் என்றும் நிறைந்து விளங்குவதால் ஆறுகளிலிருந்து நீர் வராவிட்டாலும் அது வற்றுவதில்லை. அவ்வாறு நீர் கலநதாலும் பொங்கி வழிவதில்லை. இந்த நிலையில் நிறைந்து விளங்கும் கடலில் பெருமாள் பள்ளி கொண்டுள்ளார். வெணமை தூய்மையின் அறிகுறி. தூய்மை, நிறைவு ஆகியவற்றையே பாற்கடல் குறிக்கும்.

மிகச் சிறிய ஆலவிதையினின்று மிகப்பெரிய ஆலமரம் வளர்வது போலவே, இறைவன அணுவுக்குள அணுவாகவும், பிரம்மாண்டமாகவும் காட்சியளிக்கின்றார். எவரும் ஆல விதையை விதைத்துத் தணணீர் ஊற்றுவதில்லை. அதுவாகவே வளர்ந்து விழுதுகள் மூலம் நிலைக்கிறது. அவ்வாறே இறைவனும எவர் உதவியும் இனறி நிலைத்து நிற்கிறார். ஆலிலை பசுமை மிககது. வாடிய ஆலஇலை மீதும் நீர் தூவினால் அது பசுமை பெறும். அவ்வாறே இறைவனும் பசுமையாய், பிறப்பு, இறப்பு ஆகியவற்றைக் கடந்து நிறகிறார். இத்தகையச் சிறப்புக்களையுடைய ஆலிலையிலும் திருமால் பாலகனாகப் பளளி கொணடார்.

பாறகடலிலும், ஆலிலையிலும் பள்ளிகொண்ட பரமன பக்தர்களின் மனமெனும் படுக்கையிலும் பள்ளி கொண்டு அவர்களைஆட்கொளகிறார்.

உடுத்துக களைத்த நின் பீதக ஆடை
உடுதது கலைநதது உண்டு
தொடுத்த துழாய்மலாசூடிககளைந்தன
சூடும் இத்தொணடாகளோம
விடுதத திசைககருமம திருத்தித
திருவோணததிருவிழாவில்
படுதத பைந்நாகணைப பளளி
கொண்டானுக்குப பல்லாணடு
கூறுதுமே
(பெரியாழ்வார்)



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED
AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.



டிசம்பர், 1989

# ஸப்தகிரி

விலை ரூ. 1/-




திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்